6th March 1961]

**Sri A. VEDARATHNAM** : டாக்ஸி பெர்மிட் வாங்கியவர்கள் அதை பயன்படுத்தவில்லையானால் ஒரு குறிப்பிட்ட கால எல்லைக்குள் அதை பயன்படுத்திக் கொள்ளவேண்டும் என்று வலியுறுத்தி அதற்குள் அவர்கள் டாக்ஸி விடவில்லையென்றால் பர்மிட் கொடுத்ததை ரத்து செய்து விட்டு அது வேண்டுமென்று விரும்புகிற மற்றவர்களுக்குக் கொடுக்க அரசாங்கம் முன்வருமா ?

**The Hon. Sri V. RAMAIAH** : விதிமுறைப்படி, ஒரு குறிப்பிட்ட காலம் வரை பொறுத்திருக்க வேண்டியிருக்கிறது. அதற்குள் டாக்ஸி ஓடாவிட்டால் அது ரத்தாகிவிடுகிறது. பின் தேவையைப் பூர்த்தி செய்ய இன்னும் பல மாதங்கள் ஆகிறது. இப்படியே தடைப்பட்டுக் கொண்டு போகிறது. அதில் சம்பந்தப்பட்டிருக்கக்கூடியவர்கள் தேவையை உணர்ந்து அதற்குத் தகுந்தாற்போல் டாக்ஸி விட முன்வருவதில்லை.

Mr. SPEAKER : Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—GOVERNMENT BILL.

### THE MADRAS ENTERTAINMENTS TAX (AMENDMENT) BILL, 1961.

The Hon. Sri R. VENKATARAMAN : Sir, I beg leave to introduce the Madras Entertainments Tax (Amendment) Bill, 1961.

Mr. SPEAKER : The question is—

'That leave be granted for the introduction of the Madras Entertainments Tax (Amendment) Bill, 1961.'

The motion was put and carried and leave was granted.

The Hon. Sri R. VENKATARAMAN : Sir, I introduce the Bill.

Mr. SPEAKER : The Bill is introduced.

## III.—GENERAL DISCUSSION ON THE BUDGET FOR THE YEAR 1961-62—*cont.*

Mr. SPEAKER : The hon. Member, Sri V. K. Ramaswamy Mudaliyar, will lead the discussion on the Budget for the year 1961-62.

[6th March 1961

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR : கனம் சபாநாயகர் அவர்களே, நமது மாநில நிதியமைச்சர் அவர்களால் 1961-62-க்குள்ள நிதிநிலை அறிக்கை இந்த சபை முன்பு நான்கு தினங்களுக்கு முன்பு சமர்பிக்கப்பட்டது. அந்த அறிக்கையைப் பார்ப்போமேயானால் மக்களுக்கு அது ஒரு ஏமாற்றத்தைத்தான் கொடுத்திருக்க வேண்டுமென்று சொல்லவிரும்புகிறேன். விலைவாசிகள் எல்லாம் நாளுக்குநாள் விஷம் போன்று ஏறிக் கொண்டே வருகிறது. அதைக் கட்டுப்படுத்துவதற்கு சர்க்கார் யாதொரு முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை. அதுபற்றி என்ன நடவடிக்கைகள் எடுக்கப் போகிறார்கள் என்பதுபற்றியும் அறிக்கையில் நிதியமைச்சர் அவர்கள் திட்டவட்டமாக ஒன்றுமே குறிப்பிடவில்லை. அதைப் பார்த்து நாம் எல்லோரும் வருத்தப்படவேண்டியது மட்டுமல்லாமல் அது ஒரு பெரிய ஏமாற்றத்தையும் கொடுத்திருக்கிறது என்றும் நான் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். இந்த நிதிநிலை அறிக்கையில் புது வரிகள் எதுவும் இல்லை என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. உண்மை. ஆனால் அதற்குப் பதிலாக, அதாவது இம்மாநில சர்க்காருக்குப் பதிலாக மத்திய சர்க்கார் சுமார் 60 கோடி ரூபாய் வரையில் வரி போட்டிருக்கிறார்கள். இதனால் எல்லா மாகாணங்களும் ஒரு விதத்தில் பாதிக்கப் பட்டிருந்தபோதிலும் நமது மாநிலம் இதனால், இந்த வரி விதிப்பினால் அதிகமாக பாதிக்கப்படும் என்பது பற்றி நான் பின்னால் சொல்லும் உதாரணங்களினால் எடுத்துக் காட்ட விரும்புகிறேன். நமது மாநிலசர்க்காரானாலும் சரி அல்லது மத்திய சர்க்காரானாலும் சரி வருடாவருடம் வரியைப் போட்டுக் கொண்டே போவதினால் மக்களின் வாழ்க்கைத்தரம் நாளுக்குநாள் குறைந்து கொண்டு போகிறதே தவிர வாழ்க்கைத்தரம் கொஞ்சமாவது உயரவேயில்லை, என்று நான் திட்டவட்டமாக எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். ஐந்தாண்டுத் திட்டங்கள், பின்னர் வேறு பல திட்டங்கள் போட்டு மக்களின் பொருளாதார முன்னேற்றத்திற்காக நாங்கள் பாடுபடுகிறோம் என்று சொல்லிக் கொண்டே போய்க் கொண்டிருந்தால் அதனால் இன்றைய தலைமுறையில் இருக்கும் மக்கள் பாதிக்கப் பட்டு கஷ்டப்படுகிறார்கள். எதிர்காலத்தில் வரக் கூடிய மக்களுக்காக நாங்கள் பாடுபட்டு அவர்கள் நல்ல முறையில் இருக்கவேண்டுமென்று பாடுபடுகிறோம் என்று சொல்கிறார்கள். அது ஒரு விதத்தில் உண்மை என்றிருந்தாலும் இன்றைய தலைமுறையில் இருக்கக் கூடியவர்கள் கசக்கி பிழியப்பட்டு, பலவித வரிகள் போடுவதால் இத்தலைமுறையினர் எவ்வளவுதூரம் துன்புறுத்தப் படுகிறார்கள் என்று யோசித்துப்பார்த்தால் அது மிகவும் வருத்தத்தைக் கொடுக்கிறது. வரிகளை போட்டுக்கொண்டே போனால் அதன் முடிவு என்ன ? இந்த வருடம் நம் மாநில சர்க்கார் வரி போடவில்லை. காரணம், தேர்தல் வருகிறது என்பதினால்தான். நான் திட்டவட்டமாக எடுத்துச் சொல்ல விரும்புகிறேன், வருகிற தேர்தல் முடிந்தவுடன் அடுத்த வருடம் ஒன்றுக்கு இரண்டல்லது மூன்று பங்கு வரிகளைப் போட்டு மக்களை கசக்கிப் பிழியப் போகிறார்கள், இதை யாரும் மறுக்க முடியாது என்று நான் திட்டவட்டமாக

6th March 1961] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். அடுத்தபடியாக, உணவு உற்பத்தியை எடுத்துக் கொண்டால் உற்பத்தி சிறிது பெருகியிருந்தபோதிலும் நமது டார்ஜட்படி உணவு உற்பத்தியைப் பெருக்கியிருக்கிறோமா என்று பார்த்தால் இல்லை. பின்னால் இது பற்றிய புள்ளிவிவரங்களைக் கொடுக்கிறேன். இவ்வாண்டு பட்ஜெட்டில் 2 கோடி 85 லட்சம் ரூபாய் துண்டு விழுந்திருக்கிறது. மத்திய சர்க்கார் போட்டிருக்கக் கூடிய வரிகள் காரணமாக உணவு உற்பத்தியிலானாலும் சரி அல்லது டிரான்ஸ்போர்ட்டை எடுத்துக் கொண்டாலும் சரி இன்னும் மற்ற பல துறைகளிலும் மக்கள் அதிகமாக பாதிக்கப்படப் போகிறார்கள். புகையிலை, காப்பி, மண்ணெண்ணை போன்ற பண்டங்கள் எல்லாம் மக்களின் அவசியமான பண்டங்கள் இல்லை என்று மத்திய சர்க்கார் நிதியமைச்சர் அவர்கள் கருதுகிறார்களோ என்னவோ தெரியவில்லை. இப்பொழுது இப்பண்டங்களை மக்கள் அதிகவிலை கொடுத்து வாங்கவேண்டியிருக்கிறது. இதனால் ஏழை மக்களும், நடுத்தர மக்களும் அதிகமாக பாதிக்கப்பட்டு கஷ்டப்படுகிறார்கள். பொருள்களின் விலை விஷம் போல் ஏறிக் கொண்டே போகிறது, இதைத் தவிர்க்க அரசாங்கத்தார் என்ன செய்யப் போகிறார்கள் என்பது குறித்து சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். மத்திய அரசாங்க நிதி அமைச்சர் அவர்கள் சாமர்த்தியமாக கம்பெனிகளுக்கு போட்டிருக்கும் போனஸ் வரிகளை குறைத்திருக்கிறார்கள். சாமர்த்தியமான விஷயம். அதனால் கம்பெனி நடத்துகிறவர்களை திருப்திபடுத்தி அவர்களிடமிருந்து தேர்தலுக்கு எவ்வளவு தூரம், பணம் வாங்க முடியுமோ அதை வாங்குவதற்கு வேண்டிய வழிகளை எல்லாம் செய்திருக்கிறார்கள். அதுதான் முக்கிய விஷயம். பின்னர், மத்திய அரசாங்க அறிக்கை ஒன்றை படித்தேன். டெக்ஸ்டைல் இன்டஸ்ட்ரி-க்கு 16 கோடி ரூபாய். **(Incidence of taxation)** 1960-61-ல் வசூலித்ததை விட பன்மடங்கு இப்பொழுது அதிகமாக போய்க் கொண்டிருக்கிறது. **(Handloom industry)** (கைத்தறி தொழிலை) எடுத்துக்கொண்டால் 1 கோடி 27 லட்சம் மில்கட்டு மட்டும் போட்டிருக்கிறார்கள். இரண்டு தினங்களுக்கு முன் ஒரு மில் அதிபரோடு பேசிக் கொண்டிருந்தேன். அவர்கள் இந்த புள்ளிவிவரம் போட்டுக் கொடுத்தார்கள்.

அது தவிர காஸ்டிக்சோடா போன்ற பொருட்களுக்கும் வரி விதிக்கப்பட்டிருக்கிறது. அதனால் பல பொருட்களின் விலையும் ஏறிக்கொண்டேபோகிறது. அதோடு 11-ம் நம்பர் நூலுக்கும் 40-ம் நம்பர் நூலுக்கும் வரி போடவில்லை என்று மத்திய சர்க்கார் நிதி அமைச்சர் அவர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் நம்முடைய மாகாணத்தை எடுத்துக் கொண்டால் புடவைகள், வேட்டிகள், பெட்ஷீட்டுகள் **(Bed sheets)** இவைகளெல்லாம் நாம் அதிகமாக உற்பத்தி செய்து கொண்டிருக்கிறோம். இதற்கு பெரும்பாலும் 40-ம் நம்பர் நூலைத்தான் உபயோகப்படுத்துகிறார்கள். துண்டுகளை எடுத்துக் கொண்டால் பெரும்பாலும் 11-ம் நம்பருக்கு குறைவான நூல்களி

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [6th March 1961

லேயே உற்பத்தி செய்கின்றோம். இவை எந்த நூலில் உற்பத்தி செய்வதாக இருந்தாலும் இம்மாதிரி பொதுவாக நூலுக்கு வரி போடுவதின் காரணமாக கைத்தறி நெசவாளர்கள் அதிகமாக பாதிக்கப்படுவார்கள் என்பது மட்டும் நிச்சயம். ஆட்டோ மெட்டிக் லூம் (Automatic loom) களை எடுத்துக்கொண்டால், இந்தியாவில் 14,800 ஆட்டோமெட்டிக் லூம்கள் இருக்கின்றன, இதில் தென் பிராந்தியத்தில் மட்டும் 6,000 ஆட்டோமெட்டிக் தறிகள் இருக்கின்றன இவைகளுக்கு நம் நாட்டில் வரிகள் இல்லாது இருந்த போதும், மத்திய சர்க்கார் இதற்கு நிறைய செலவு செய்து வருகிறார்கள். 1960-61-க்கு சுமார் 61 கோடி ரூபாய் மாகாணங்கட்கு ஒதுக்கியிருந்த போதிலும் 1961-62-ம் ஆண்டுக்கு மாகாணங்களுக்கு எல்லாம் 214 கோடி ரூபாய் பிரித்திருக்கிறார்கள். மத்திய சர்க்கார் ராஜ்ய சர்க்கார்களை எல்லாம் பார்த்து நீங்கள், வரி ஒன்றும் போட வேண்டாம், நாங்களே வரி போட்டு பிரித்து ராஜ்யங்களுக்கு கொடுத்துவிடுகிறோம் என்கிறார்கள். ராஜ்யங்களே வரி போட்டால் எலக்ஷன் சமயத்தில் பாதகம் ஏற்படும் என்கிற ஏற்பாட்டில் தான் இவ்விதம் செய்து வருவதாக தெரிகிறது. ஆனால் தென் பிராந்தியத்தைப் பொறுத்தவரையில் நமக்கு எவ்வளவு கொடுக்கப்போகிறார்கள் என்பது தெரியவில்லை. இந்த விதத்தில் எல்லாம் மத்திய சர்க்கார் நமக்கு ஒன்றும் கொடுக்காமல் இருந்து வருகிறார்கள் என்பதை நான் அதிகமாக சொல்ல வேண்டியதில்லை. பட்ஜெட் மெமோரண்டம் 6-வது பக்கத்தில் சொல்லப்பட்டிருப்பதைப் பார்ப்போமேயானால் முதலில் 33 லட்சம் துண்டு விழும் என்று எதிர்பார்த்தோம். ஆனால் திருத்த மதிப்பீட்டில் ஒரு கோடி 23 லட்சம் ரூபாய் உபரியாக கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டுள்ளது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். அதோடு சம்பள கமிஷன் சிபாரிசு பிரகாரம் சம்பளம் உயர்த்தியதற்காக 4 கோடி ரூபாய் கொடுக்கப்பட்டது என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியெல்லாம் அதிகமாக செலவு செய்து இருந்தும் எப்படி உபரி ஏற்பட்டது, அப்படியானால் ஏன் துண்டு விழும் என்று முன்பு கணக்கிடப்பட்டது? இம்மாதிரியான புள்ளிவிவரங்களைப் பார்க்கும்போது அது சரியானதாக தெரியவில்லை. 'ஜக்ளரி ஆப் ஃபிக்கர்ஸ்' "Jugglery of figures" ஏதாவது ஏற்பட்டிருக்கிறதா? மத்திய சர்க்காரிடமிருந்து சம்பள உயர்வு கொடுப்பதற்காக உதவி பெற்று இருக்கிறோம் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியானால் அவர்களுடைய கோரிக்கையின்படி மத்திய சர்க்கார் ஊழியர்களைப் போன்றே இவர்களுக்கும் கொடுத்திருக்கலாம் அல்லவா, அவ்விதம் கொடுக்காமல் இருப்பதற்கு காரணம் என்ன? மத்திய சர்க்காரும் அவர்களுடைய ஊழியர்களுடைய சம்பளத்தை உயர்த்தினார்கள், முதலாவதாக இந்தச் செலவுக்கு மத்திய சர்க்கார் கொடுப்பார்கள் என்று சொல்லப்பட்டதிலிருந்து இப்போது அவர்கள் பின் வாங்குவதற்கு காரணம் என்ன? இவைகளை எல்லாம் நிதி அமைச்சர் அவர்கள் தனது பதிலில் சொல்ல வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

6th March 1961] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

அடுத்தபடியாக இரண்டு கோடி குறைந்திருக்கிறது என்று சொல்லப்படுகிறது, அதே சமயத்தில் மைனஸ் (Minus) காலத்தில் 33 லட்சம் காட்டப்பட்டிருக்கிறது. இது எப்படி பொருந்தும் என்றும் தெரியவில்லை.

இது தவிர விலைவாசிகள் அதிகமாக ஏறிக்கொண்டே போவதின் காரணமாக அரசாங்க ஊழியர்களுடைய சம்பளத்தைப்பற்றியும் இனி பரிசீலனை செய்ய வேண்டியிருக்குமோ என்கிற பயம் ஏற்படுகிறது. அவ்விதம் பரிசீலனை செய்து பார்த்து அவர்களும் சம்பளம் கூடுதலாக கொடுக்கவேண்டும் என்றால் அதற்கான தொகைக்கு நாம் எங்கே போவது, இதைப்பற்றியும் நாம் சிந்திக்க வேண்டியிருக்கிறது. முக்கியமாக ஐந்தாண்டுத் திட்டங்களை எடுத்துக்கொண்டால் முதல் முதலாக பட்ஜெட் மெமோரண்டம் 35-வது பக்கத்தில் மைனர் இரிக்கேஷன் அல்லது சிறிய நீர் பாசனத்திற்காக 133-வது ஐட்டத்தில் 163 லட்சம் ரூபாய் கொடுத்திருக்கிறார்கள். இது மிகவும் குறைவு என்றே எண்ணுகிறேன். மைனர் இரிக்கேஷன் திட்டங்களைப் பொறுத்தவரையில் வெகு துரிதமாக வேலை நடத்தப்படவேண்டும். இவைகள் எல்லாம் நல்ல முறையில் வேலை செய்ய வேண்டும் என்ற ஏற்பாட்டிற்காக ஃபுட் புரொடக்ஷன் டிப்பார்ட்மெண்ட் (உணவு உற்பத்தி இலாகா) எல்லாம் தனியாக ஏற்படுத்தியும் கூட இவைகளினுடைய வேலை ஆமை வேகத்தில்தான் போய்கொண்டிருக்கிறது. அவ்வாறு இல்லாமல் துரிதமாக வேலை செய்து திட்டங்களை எல்லாம் பூர்த்தி செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். தவிரவும் 43-வது பக்கத்தில் வெளி மார்க்கட்டில் பத்துக் கோடி ரூபாய் பொதுக் கடன் எழுப்ப உத்தேசித்திருப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது. இப்படியானால் இந்தக் கடனை எப்போது திருப்பிக்கொடுக்கப் போகிறோம் என்று தெரியவில்லை. இதன் காரணமாக பெர் காப்பிட்டா (per capita) வருமானம் உயரும் என்று நினைக்க முடியாது. அட்மினிஸ்ட்ரேஷன் ரிப்போர்ட்டுகளை எல்லாம் பார்க்கும் போது அநேகமாக போடப்படும் எல்லா ஸ்கீம்களும் லாபகரமாக இல்லை என்பதை சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். சம்பளமும் அலவன்ஸ் விஷயத்தை எடுத்துக்கொண்டால் பெரும் பகுதி இதற்காக செலவு செய்யப்படுகிறது. சுமார் 27 கோடி ரூபாய் வரை இதற்கு செலவு செய்யப்படுகிறது. இவ்வளவு தொகை இதற்கு அவசியமா என்பதைப்பற்றி நாம் ஆராய்ச்சி செய்து பார்க்கவேண்டும். அதற்காக வேலையில் இருப்பவர்களை வெளியில் போகச்சொல்லவேண்டும் என்று நான் சொல்லவரவில்லை. டிப்பார்ட்மெண்ட்-கள் எல்லாம் விஸ்தரித்துக்கொண்டே போகிறது. இவ்வளவு தூரம் விஸ்தரிப்பதற்கு தகுந்தவாறு வேலை அதிகமாக துரிதமாக நடந்து கொண்டிருக்கிறது என்று சொல்வதற்கில்லை. சிப்பந்திகள் இப்போது வேலை செய்வதை விட இன்னும் அதிகமாக வேலை செய்தால் நல்லமுறையில் துரிதமாக வேலை நடக்கும். சிப்பந்திகளுடைய சம்பளத்தைப் பொறுத்தவரையில் இனியும் விஸ்தரிக்காதவாறு பார்த்துக்

கொள்ளவேண்டும். இருக்கின்ற சிப்பந்திகளைக் கொண்டே இன்னும் அதிகமான அளவில் வேலை துரிதமாக நடைபெற ஏற்பாடு செய்யவேண்டும். புதிதாக உத்யோகஸ்தர்களை நியமிக்கின்ற விஷயத்திலும் நல்ல ஆலோசனை செய்து பார்த்து மிகவும் அவசியம் தானா என்பதைப்பற்றி யோசிக்கவேண்டும். அதேபோன்று டெல்லிக்கோ அல்லது மற்ற இடங்களுக்கோ அமைச்சர்கள் போகும் போது, அவர்களோடு பத்து பதினைந்து உத்தியோகஸ்தர்கள் போகிறார்கள். அமைச்சர்களுக்கு உதவியாக ஒருவர் அல்லது இரண்டு பேர் போனால் போதாதா என்பதைப்பற்றியும் ஆலோசனை செய்யவேண்டும். இதில் எவ்வளவு தூரம் செலவை குறைக்க முடியுமோ அவ்வளவு தூரம் குறைக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, கைத்தொழில்களைப் பொறுத்தவரையில் நம்முடைய பிராந்தியத்தில் அதிகமான அளவில் தொழில்கள் நிறுவப்படவில்லை. அவ்விதம் நிறுவப்படாமல் இருந்து கொண்டிருந்தால் வேலையில்லாத்திண்டாட்டம் இருந்து கொண்டேயிருக்கும். பொருளாதாரத் துறையிலும் நம் பிராந்தியம் முன்னேற முடியாது. அதோடு நாட்டிலுள்ள மக்களுடைய வருமானம் பெர் காப்பிட்டா வருமானமும் உயராது. நம்முடைய நாட்டிலுள்ள மக்களுடைய வருமானம் பெருகுகின்ற அளவுக்கு பெர் காப்பிட்டா உயருகின்ற அளவுக்கு, நம்முடைய சர்க்கார் மத்திய சர்க்காரிடம் சொல்லி, வேறு பல துறைகளில் நம்முடைய பிராந்தியம் புறக்கணிக்கப்பட்டிருந்தாலும் கனரகத் தொழில்களை ஏற்படுத்துவதற்கு முயற்சிகள் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

நெய்வேலியைப்பற்றி நாம் அதிகமாக எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறோம். அதில் உற்பத்தியாகப் போகின்ற மின்சாரம் நமக்குப் போதுமானதாக இருக்காது என்று சொல்லுகிறார்கள். அதனால் வரப்போகின்ற தொழில்களும் போதுமானதாக இருக்காது. முக்கியமாக வெளி மாகாணங்களிலிருந்து நமக்கு (manufacturing goods) மானுஃபாக்சரிங் குட்ஸ் உற்பத்தியான பொருள்கள் அதிகமாக வரவேண்டியதாக இருக்கும். இம்மாதிரி வருவதற்குத் தடையாக இருப்பது போக்குவரத்து சாதனங்கள். ரயில் வசதி போதுமானதாக இல்லை. அதன் காரணமாக நமக்குப் பலவித நெருக்கடிகளும் கஷ்டங்களும் இருக்கின்றன. சில நாட்களுக்கு முன்பு கூடப்பார்த்தோம். போக்குவரத்து சாதனங்கள் இல்லாததன் காரணமாக இங்கே coal ஸ்கார்ஸிட்டி நிலக்கரி பற்றாக்குறை வந்திருக்கிறது. அநேக இடங்களில் நாளுக்கு நாள் கட்டிடங்களை விஸ்தரித்துக்கொண்டே போகின்றோம். ஆனால் கட்டிடங்களைக் கட்டுவதற்கு முக்கியமாக செங்கல் கிடையாது. கிடைத்தாலும் விலை அதிகமாக இருக்கிறது. முக்கியமாக கோல் இல்லாததால்தான் இவைகளின் விலையானது விஷம்போல் ஏறுகின்றது. இதையெல்லாம் தடுக்க போக்குவரத்து சாதனங்கள்தான் மிகவும் முக்கியமானது. உதாரணமாக நம் நாட்டிலிருந்து இரும்புக்கனி வெளி நாடுகளுக்குக் கொண்டுசெல்லப்பட்டு உற்பத்தி செய்யப்

6th March 1961] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

பட்ட பொருள்களை இங்கே கொண்டுவந்து (Competitive rate) காம்பிடிடிவ் ரேட்டில் கொடுக்கிறார்கள் என்றால் நாம் ஏன் போக்குவரத்து சாதனங்களை விருத்தி செய்து இங்கேயே உற்பத்தி செய்ய முடியாது என்று கேட்கிறேன்.

இன்னும் இண்டஸ்ட்ரீஸ் டிபார்ட்மெண்டை எடுத்துக் கொண்டால் எவ்வளவு தூரம் எக்ஸ்பான்ஷன் விஸ்தரிப்பு இருந்த போதிலும் அநேக துறைகளில் நன்றாக அவைகள் இயங்கவில்லை. முக்கியமாக ஆர்ட்டிஸான்களுக்கு ட்ரைனிங் ஸெண்டர்களை (Artisan Training Centre) ஏற்படுத்தி அவர்களுக்கு பயிற்சி கொடுக்கவேண்டியது முக்கியம்—அதை நான் ஆதரிக்கிறேன். அதே நேரத்தில் நாம் வியாபாரத்தை எடுத்துக்கொண்டு பார்த்தால், முக்கியமாக திண்டுக்கல் லாக் யூனிட்டை எடுத்துக் கொண்டால் லட்சக்கணக்கான ரூபாய் அளவுக்கு பொருள்கள் மார்க்கெட்டில் விலை ஆகாமல் தேங்கிக் கிடக்கின்றன. அந்த மாதிரித்தான் (Shoes) ஷூஸ், பூட்சுகள். இந்த மாதிரி பல வழிகளில் நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது. இதை அரசாங்கம் பரிசீலிக்கவேண்டும். சமீப காலமாக இந்த டிப்பார்ட்மெண்ட் ஒன்று மட்டும் நான்கு மடங்கு விருத்தியாகியிருக்கிறது. இவ்வளவு தூரம் விருத்தியாகவேண்டுமா? கைத்தொழில் விருத்தியாக வேண்டும் என்று இருந்தபோதிலும் இவ்வளவு தூரம் விருத்தியாக வேண்டுமா; அதன் காரணமாக எவ்வளவு நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது என்று பரிசிலனை செய்து பார்க்கவேண்டும். முக்கியமாக கட்டிடங்களை எடுத்துக் கொண்டால் செலவுகள் அநாவசியமாக ஏற்பட்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன். தனியாக ஒரு சீஃப் என்ஜினீயர் போட்டு (Chief Engineer) இண்டஸ்ட்ரியல் ட்ரைனிங் ஸ்கூல்களை அவர்களிடம் கொடுத்து, (Technical education) டெக்னிகல் எஜுகேஷன் மாதிரி இலாக்காக்களை அவர்களிடம் கொடுத்து லேபர் மினிஸ்டரின் கீழேயே இருந்தால் நல்ல முறையில் வேலைகளைச் செய்ய முடியும்—அதைப் பற்றியும் யோசிக்கவேண்டும். இண்டஸ்ட்ரீஸ் டிபார்ட்மெண்ட் இன்னும் பல துறைகளில் விருத்தியாகி நல்ல முறையில், சிக்கன முறையில் வேலை செய்தால் நல்லபடியாக இருக்கும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

(Department of Publicity) டிபார்ட்மெண்ட் ஆஃப் பப்ளிஸிட்டியை எலெக்ஷனுக்காக ஆளும் கட்சி வைத்துக்கொண்டிருப்பதாக எண்ணுகிறேன். பப்ளிஸிட்டி டிபார்ட்மெண்ட் என்று தனியாக வேண்டுமா, எடுகேஷன் டிபார்ட்மெண்டோடு இதை சேர்த்து வைத்துக்கொள்ளக் கூடாதா என்று கேட்கிறேன். இந்த மாதிரி வைத்துக்கொண்டிருப்பதன் காரணமாக அநேகவித செலவுகள் ஆகின்றது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஐந்தாண்டுத் திட்டங்களைப் பிரசுரிக்கவும் மற்றும் அநாவசிய வேலைகளைச் செய்யவும் இந்த இலாகா இருக்கிறதே தவிர வேறொன்றுமில்லை. கல்வி இலாகா மூலமாக அதை ஏன் நிர்வகிக்கக் கூடாது என்று கேட்க விரும்புகிறேன்.

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [6th March 1961

நான் நிதி அமைச்சர் அவர்களை ஒன்றுக்காக பாராட்ட விரும்புகிறேன்—அதாவது 11-வது ஸ்டாண்டர்ட் வரையில் இலவசக் கல்விக்கு ஏற்பாடு செய்திருக்கிறார் என்பதற்காக— அதை நான் வரவேற்கிறேன். ஆனால் இந்தச் சலுகை 100 ரூபாய மாத வருமானம் வருபவர்கள் மட்டில் என்று போட்டிருப்பதன் காரணமாக இது அநேகம் பேர்களுக்கு நன்மை விளைவிக்காது என்பது எனது தாழ்மையான அபிப்பிராயம். இப்போது ஒரு ரூபாய் மதிப்பு (Rupee value) 4 அணுதான் என்று சொல்லுகிறார்கள். அதைவிட இன்னும் குறையுமோ என்பது எனது சந்தேகம். அதாவது 2 அணு அல்லது 3 அணுதான் இருக்கும் என்று நான் நினைக்கிறேன். பொருளாதார நிபுணர் கள்தான் இதைப்பற்றிச் சொல்லவேண்டும். நான்கு அணு என்று வைத்துக்கொண்டாலும் 25 ரூபாய் சம்பளம் இருப்பவர்களுக்குத் தான் இந்தச் சலுகை கொடுப்பதாக இருக்கும். இதனால் அநேகம் பேர்களுக்கு அனுகூலம் இருக்காது. இந்த கல்வி சலுகை கொடுப்பதற்கு குறைந்தது 300 ரூபாய் என்றாவது இருக்க வேண்டும். அப்பேர்ப்பட்ட உத்தியோகஸ்தர்களுடைய குழந்தை களுக்கு இலவசக் கல்வி கொடுக்க ஏற்பாடு செய்தால் நலமாக இருக்கும் என்று நினைக்கிறேன். (குறுக்கீடு). அதாவது 300 ரூபாய் மாத வருமானம் இருக்கக் கூடியவர்களின் குழந்தை களுக்கு இலவசக் கல்வி அளிக்க ஏற்பாடு செய்தால் நலமாக இருக்கும் என்று சொல்லிக்கொள்கிறேன்.

மத்தியகால உணவுத் திட்டத்தைப் பற்றி இன்றைய கேள்வி நேரத்தின்போதுகூட அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். சர்க்கார் ஒரு கமிட்டி போட்டு விசாரணை நடந்து இப்போது அந்தக் கமிட்டி அறிக்கை சமர்ப்பித்திருப்பதாகச் சொன்னார்கள். ஆனால் சற்று பரிசீலனை செய்யவேண்டும். நான் இதை முழு மனதோடு வரவேற்கிறேன். இருந்தாலும் இதில் சில கோளாறுகள் இருக்கின்றன. என்னை வரவழைத்து கமிட்டி தலைவர் அவர்கள் கூட கேள்விகள் கேட்டார்கள். நான் அபிப்பிராயத்தை சொல்லி யிருக்கிறேன். எனது பகுதியிலும், மற்ற பகுதிகளிலும் ஓரா சிரியர் பள்ளிகளிலும், இரண்டு ஆசிரியர் பள்ளிகளிலும் வேலை செய்யக்கூடிய ஆசிரியர்கள் அநேகம் பேர்கள் பள்ளிச் சீரமைப்பு மாநாட்டுக்கு நிதி சேகரிக்க போகவேண்டியிருக்கிறது. அதனால் பள்ளிக்கூடத்திற்கு வர முடியவில்லை என்று சொல்லுகிறார்கள். அதனால் அநேகம் பள்ளிகள் மூடப்பட்டிருக்கின்றன. உண்மை யாக சில இடங்களில் போகிறார்கள். சில இடங்களில் போகா மலும் இருக்கலாம். இதன் மூலமாக பள்ளிகள் நல்ல முறையில் நடக்கவில்லை என்பதை யோசிக்கவேண்டும். இப்போது அந்தக் கமிட்டி ரிப்போர்ட் அனுப்பியிருப்பதன் காரணமாக இதை நன்றாக பரிசீலனை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

தவிர எங்கள் பிராந்தியத்தில் வருஷக் கணக்கில் இன்ஸ்பெக்ஷன் இல்லாத காரணத்தினால் அநேக பள்ளிகள் நல்ல முறையில் நடக்கவில்லை. அதன் காரணமாக மக்களுக்கு அதிருப்தி உண்டாகியிருக்கிறது. அதற்கும் திட்டம் போட்டோமேயொழிய

பின்னிட்டு பஞ்சாயத்து யூனியனிடம் ஒப்படைத்து எப்படி ஜில்லா ரீதியில் சர்க்கார் மூலமாக நல்ல முறையில் நடக்க என்ன செய்யப்போகிறார்கள் என்பதைத் திட்டவட்டமாகச் சொல்ல வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இருபது கோடி ரூபாய் வரையில் இந்த ஆண்டு நிதி நிலை அறிக்கைப்படி கல்விக்காகச் செலவழிக்கப்போகிறோம். ஆதாரப் பள்ளிகள் நல்ல முறையில் நடக்காவிட்டால் உயர்நிலைப்பள்ளிகள் நல்ல முறையில் நடக்குமா என்பதை யோசிக்கவேண்டும். ஆகையால் பள்ளிகளை இன்ஸ்பெக்ஷன் செய்வது நல்ல முறையில் நடக்கவேண்டும், இதற்கு உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும் என்ற எனது அபிப்பிராயத்தைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக ரெவின்யூ டிபார்ட்மெண்டை எடுத்துக் கொண்டால் அதில் ஊழல்கள் நிறைய இருந்துகொண்டே போகின்றது. எங்கு பார்த்தாலும் பேப்பர்கள் டிலே. லஞ்ச ஊழல்கள் நாளுக்குநாள் அதிகரித்துக்கொண்டே போகிறதே யொழிய குறைந்தபாடில்லை. இப்போது செங்கல்பட்டு, கன்யா குமரி மாவட்டங்கள் தவிர மற்ற மாவட்டங்களில் ரெவின்யூ அதி காரிகள் போடப்பட்டிருக்கிறார்கள். அப்படி இருந்தபோதிலும் நிறைய (Personal Assistant) பர்ஸனல் அஸிஸ்டெண்ட்கள் கலெக்டருடன் கீழ் இருந்துகொண்டிருக்கிறார்கள். அப்படி இருந்தும் இந்த ஊழல்கள் இருந்துகொண்டே இருக்கிறது. இது மக்களுக்கு பெரிய அதிருப்தியையும் ஏமாற்றத்தையும் உண்டுபண்ணியிருக்கிறது. எனக்குத் தெரிந்த நண்பர்கள் இரண்டு பேர்கள் சொன்னார்கள். சினிமாவுக்கு லைஸென்ஸுக்காக அப்ளை செய்தால் 6 மாதம் அல்லது 8 மாதம் வரையில் கலெக்டர் ஆபீஸை விட்டு பேப்பர்கள் போவதில்லையாம். அதன் காரண மாக (Entertainment tax) எண்டர்டெயின்மெண்ட் டாக்ஸ் சர்க்காருக்கு நஷ்டம். அதைப்பற்றி உடனடியாக நடவடிக்கை எடுக்காவிட்டால் யாதொரு பிரயோசனமும் இல்லை. இந்த பேப்பர்கள் கலெக்டர் ஆபீஸிலிருந்து போர்ட் ஆபீஸ் வர வேண்டும், அதன் பிறகு சர்க்காருக்கு வரவேண்டும். அதிக கால தாமதம் ஆகின்றது. சினிமா சொந்தக்காரர்கள் இதுவரை சிப்பந்திகளை வைத்து சம்பளம் கொடுக்கவேண்டியிருக்கிறது. அவர்கள் அநேக கஷ்டங்களுக்கு உள்ளாகிறார்கள். அரசாங்கத் திற்கு நஷ்டம். இதைப் பொறுத்த வரையில் என்ன செய்யப் போகிறார்கள் என்று கேட்க விரும்புகிறேன்.

அதேமாதிரி இப்போது ரைஸ் மில்லை எடுத்துக்கொண்டால், ஒரு வியாபாரி அதற்கு லைசென்ஸ் வேண்டுமென்று விண்ணப் பித்தால் உடனடியாகக் கிடைப்பதில்லை. என்னுடைய பிராந்தி யத்தில் ஒரு வியாபாரிக்கு 2-1/2 வருஷம் ஆகியும், போர்டிலிருந்து அந்தப் பேப்பர் வெளிவராமல் இருக்கிறது. அதற்குக் காரணம் ரைஸ் மில்லைப் பற்றி சர்க்காரின் திட்டவட்டமான புரோகிராம் என்னவென்று தெரியவில்லை. கைக்குத்தல் அரிசியைப் பரப்பு

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [6th March 1961

வதற்கு ஆதரவா, அல்லது மெஷின் அரைப்பு அரிசியை ஆதரிக்கப் போகின்றார்களா என்பதைப்பற்றி என்ன முடிவு செய்வது என்று கடந்த மூன்று, நான்கு ஆண்டுகளாக யோசித்துக்கொண்டு வருகிறார்கள். இதனால் நம் மாகாணத்தில் 500, 600 பெடிஷன்கள் போடப்பட்டு போர்டு ஆபிசிலே குவிந்து கொண்டு இருப்பதாக நான் கேள்விப்பட்டேன். அதைப் பற்றி எந்த விதமான நடவடிக்கையும் எடுக்கப்படாமல் இருக்கின்றன. அப்படி எடுக்காவிட்டால் இன்றைக்கு ரைஸ் மில்லுக்கு லைசன்ஸ் கொடுக்க முடியாது என்ற நிலைமை ஏற்படுகிறது. இப்படி 500, 600 விண்ணப்பங்கள் போடப்பட்டு, அவைகளின்மீது எவ்வித நடவடிக்கையும் எடுக்காவிட்டால், அவைகளினுடைய கதி என்ன? அநேகம் பேர் மெஷின் வாங்கியிருக்கிறார்கள். சிலர் கட்டிடத்தையும் கட்டியிருக்கிறார்கள். இப்படி சும்மா இருந்தால் சர்க்காருடைய பாலிசி (Policy) என்னவென்று தெரியவில்லை. ஒன்று நாங்கள் கைக்குத்தல் அரிசியைத்தான் ஆதரிக்கப் போகின்றோம், மில்களுக்கு லைசன்ஸ் கொடுக்க முடியாது என்றாவது திட்டவட்டமாகச் சொல்லி விடவேண்டும். ஆகவே சர்க்காரின் திட்டவட்டமான கொள்கை என்னவென்பதைத் தெரிவிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

தவிர, (takkavi) தக்காவி லோன் விஷயத்தில் இதுவரை சுமார் 8 கோடி ரூபாய் விநியோகிக்கப்பட்டிருக்கிறது. இப்போது மேலும் கொடுக்கப் போவதாக தீர்மானித்திருக்கிறார்கள். பழைய பாக்கிகள் இன்னும் நிச்சயமாக வசூலித்து விடமுடியுமென்ற நிலையில்லாமல் இருக்கிறது. இதைப் பற்றித் தனியான ரிஜிஸ்தரும் கிடையாது. அதன் காரணமாக, அநேகம் பேர்கட்கு சரியான புள்ளிவிவரங்கள் கிடைக்காமல் பலவித கஷ்டங்கள் ஏற்படுகின்றன. இதைப்பற்றி பப்ளிக் அக்கவுண்ட்ஸ் கமிட்டியில் பரிசீலனை செய்தோம், சர்க்காருக்கு சில யோசனைகள் சொல்லி இருக்கிறோம். ஆனால் என்ன நடவடிக்கைகள் எடுத்திருக்கிறார்கள் என்பதை அறிய விரும்புகிறேன்.

Administration of justice அட்மினிஸ்ட்ரேஷன் ஆப் ஜஸ்டிஸ், நீதி வழங்கும் இலாகா பற்றிய விஷயத்திலே நிறைய டிபார்ட்மெண்டுகள் அநேக இடங்களில் ஏற்படுத்தியிருக்கிறார்கள். இப்போதுகூட எங்கள் மாவட்டத்திலே ஒரு சப்-ஜட்ஜ் நியமித்திருக்கிறார்கள். இப்படி இந்த இலாகாவைப் பொறுத்தவரையில் எல்லாவிடங்களிலும் எக்ஸ்பாண்ட் செய்துகொண்டு வருகிறார்கள். அநேக பிராந்தியங்களிலே இப்படி போடப்பட்டும், கேஸ்களைப் பைசல் செய்வதில் காலதாமதம் ஆகிக்கொண்டே இருக்கிறது. சில கேசுகள் 3, 4 வருஷங்கள் ஆகியும் பைசல் செய்யப்படாமல் காலதாமதமாகிக் கொண்டு வருகின்றன. அதன் காரணமாக ஜஸ்டிஸ் டிலே அதாவது ஜஸ்டிஸ் டினை செய்யப்படுகிறது. அதன் காரணமாக மக்களிடையே பெரிய அதிருப்தி ஏற்படுகிறது. இதைப்பற்றியும் தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

6th March 1961] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

அடுத்து வெல் சப்சிடி ஸ்கீம், கிணற் மான்யம். இந்த ஸ்கீமுக்கு 546 லட்ச ரூபாயிலிருந்து புது பட்ஜெட்டின் 327-வது பக்கத்தைப் பார்த்தால் இத்தொகையை 74,000 ரூபாயாகக் குறைத்திருக்கிறார்கள். அதன் காரணமாக இனிமேல் சர்க்கார் கிணற்றுக்கு சப்சிடி கொடுக்கப் போவதில்லையா? கிணறு ஒன்றுக்கு 500 ரூபாய் விதம் சப்சிடி கொடுப்பதாக கனம் விவசாய அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அதை நான் வரவேற்கிறேன். ஆனால் புதுத் திட்டத்தின்கீழ் அடுத்த 1961-62 வருஷத்திற்கு இத்தொகையை இவ்வளவு குறைத்திருக்கிறார்களே, இப்படிக் குறைத்தால் உணவு உற்பத்தியானது அதிகப்படுமா என்பதை நாம் யோசிக்க வேண்டும். என்னுடைய மாவட்டத்திலே யுத்த காலத்திலே உணவு உற்பத்தியானது மிகவும் பாதிக்கப்பட்ட காரணத்தினால், யுத்தம் முடிந்தவுடன் சுமார் 10,000 கிணறுகள் தோண்டப்பட்டது. அப்போது மத்திய சர்க்கார் சப்சிடி கொடுத்ததின் காரணமாகத்தான் மக்கள் எல்லோரும் முன்வந்து நிறைய கிணறுகள் தோண்டினார்கள். அப்போது சுமார் 10,000 கிணறுகள் தோண்டியதன் காரணமாக, சுமார் 10,000 ஏக்கர் நிலங்களில் நன்செய் சாகுபடி செய்ய முடிந்தது. அதனால் உற்பத்தி பெருகிற்று. அப்படி இருக்கும்போது, திடீரென்று இத்தொகையை 74,000-ஆக குறைத்திருப்பதால், இனி சப்சிடி கொடுக்கப் போவதில்லையா? என்ன காரணத்தினால் இத்தொகை இவ்வளவு குறைக்கப்பட்டது என்பதை விளக்குமபடி கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து, கம்யூனிடி டெவலப்மெண்டைப் பற்றிப் பார்த்தால், அதிலே ஒரு கோடி ரூபாய் பே அண்ட் அலவன்சாக எஸ்டாபிளிஷ்மெண்டுக்கு மட்டும் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதற்கு மொத்த டிமாண்ட் 502 லட்சம் ரூபாய். இது எப்படி செயல்பட்டுக் கொண்டு வருகிறது என்பதைப் பற்றியெல்லாம் எல்லா அங்கத்தினர்களுக்கும் தெரியும். இதில் எவ்வளவு தூரம் வீண் செலவுகள் எல்லாம் செய்யப்படுகின்றன என்பதைப் பற்றி நாம் யோசிக்க வேண்டும். அநேக இடங்களில் இந்தப் பிராந்தியங்களில் அபிவிருத்தி ஸ்கீம் ஆரம்பிக்கப்பட்டு இவ்வளவு நாளாகியும் ரோடுகளே போடவில்லை. ஜீப்புகள்கூட போகமுடியாத அநேக ரோடுகள் இருக்கின்றன. சில பிராந்தியங்களில் போடப்பட்டுள்ள ரோடுகள் நல்ல நிலையில் இல்லாமல் சீர்கேடான நிலைமையில் இருக்கின்றன. அங்கெல்லாம் புதிய ரோடுகள் போட வேண்டும். அதற்கும் சரிவர நடவடிக்கை எடுக்கவில்லை. தவிர, ஜில்லா போர்டுகளிலும் அநேகமான பஸ் போகும் இடங்களில் நல்ல ரோடுகள் போடப்படாமல் விடப்பட்டிருக்கின்றன. இதை யார் போடுவது என்று சர்க்காருக்கும், ஹைவேஸுக்கும் கரஸ்பாண்ட் செய்யப்பட்டு வருவதாகச் சொல்லப்படுகிறது. இதில் சர்க்கார் முன்னுக்கு வந்து, இந்த பெரிய சாலைகளையெல்லாம் உடனே தாங்கள் எடுத்துக் கொள்ளாமல் இருக்கிறார்கள். ஏதோ மெயின்டெனென்சுக்காக (maintenance) கிராண்டு கொடுக்கிறார்களே தவிர, திட்டவட்டமாக சர்க்காரே எடுத்துக் கொண்டு அதைத் துரிதமாகச் செய்வதற்கு முன்வரவில்லை. இந்த

பெரிய ரோடுகளையெல்லாம் சர்க்கார் எடுத்துக் கொண்டால்தான், சிறிய ரோடுகள் எல்லாம் பிளாக்கு டெவலெப்மெண்ட் டிபார்ட் மெண்ட் எடுத்துக் கொள்வதற்கு ஏதுவாக இருக்கும். டெவலெப் மெண்ட் பிளாக்குகள் எல்லாம் எப்படியும் 1961 அக்டோபருக்குள் எடுத்து பூர்த்தி செய்யப்போவதாகச் சொல்லப்படுகிறது. ஆகவே அதற்குள்ளாகவே அந்த ரோடுகளையெல்லாம் போட்டு முடிக்க வேண்டுமென்றால், சிறிய ரோடுகளையெல்லாம் பிளாக்குக்கு கொடுத்துவிட்டு, கூடிய சீக்கிரத்தில் பெரிய ரோடுகளை சர்க்கார் போடுவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொண்டு, சிறிய ரோடுகளை யும் சீக்கிரம் போட்டு முடிப்பதற்கு பிளாக்குகளுக்கு வேண்டிய உதவிகளைச் செய்துகொடுத்து, இதைப் பூர்த்தி செய்வதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

தவிர, இந்தப் பஞ்சாயத்துக்களை இன்ஸ்பெக்ஷன் செய்வதற் காக ஐ.எல்.பி. நியமிக்கப்பட்டிருக்கிறார். இப்போது இதற்கு ஒரு டிபுடி செகரட்டரி, ஐ.எல்.பி. என்று இரண்டு பேர்கள் செக்ரடரியேட்டிலேயே இருந்து வருகிறார்கள். முக்கியமாக முனிசிபாலிடிகளையெல்லாம் இன்ஸ்பெக்ஷன் செய்வதற்கு இவர் களும், பஞ்சாயத்துக்களையெல்லாம் இன்ஸ்பெக்ஷன் செய்வதற்கு பிளாக்குகளுக்கும் பொறுப்பு கொடுத்திருந்தாலும், ஐ.எல்.பி. இல்லாவிட்டால் இந்தப் பஞ்சாயத்துக்கள் எல்லாம் நல்ல முறை யில் நடைபெறுமா என்பதை பரிசீலனை செய்யவேண்டும். முன்பு ஜில்லா போர்டுகள் எல்லாம் இருக்கும்போது, அவைகளை இன்ஸ்பெக்ஷன் செய்வதற்கு ஐ.எல்.பி., கலெக்டர் ஆகியோர் இருந் தார்கள். ஆனால் இப்போது பிளாக்குகளுக்கு ஒரு டிவிஷனல் இன்ஸ்பெக்டர் போடப்பட்டிருக்கிறது. ஆனால் இந்த டிவிஷனல் இன்ஸ்பெக்டருக்கும், பீ.டீ.ஓ.-வுக்கும் எப்படி உறவு என்று தெரிய வில்லை. இவர் அவருக்குப் பொறுப்பா அல்லது அவர் இவருக்குப் பொறுப்பா என்று சொல்லப்படவில்லை. இந்தப் பஞ்சாயத்துக்களை யெல்லாம் மேற்பார்வையிடுவது யார் என்று தெரியவில்லை. பீ.டீ.ஓ. இருந்தபோதிலும், பஞ்சாயத்துப் போர்டு தலைவர்கள் இருந்தபோதிலும், மேற்கொண்டு இவர்கட்குமேல் இன்ஸ்பெக்ஷன் செய்வதற்கு யார் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள் என்பதைத் திட்ட வட்டமாகச் சொல்லவில்லை. ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டு, இந்தப் பஞ்சாயத்து ஆக்ட் பாஸ் செய்தபிறகு, திட்டவட்டமான காரியங் களை இப்படி செய்யப்போகிறோம் என்பதற்கு எவ்வித நடவடிக் கையும் இதுவரை எடுக்கப்படவில்லை. ஒருசில இடங்களில் நான் கேள்விப்பட்டேன். அங்கு கொடுக்கப்பட்டுள்ள ஜீப்பை பீ.டீ.ஓ. உபயோகப்படுத்துவதா அல்லது பஞ்சாயத்து போர்டு தலைவர் உபயோகப்படுத்துவதா என்பதில் அபிப்பிராயபேதம் ஏற்பட்ட தாம். இதற்கெல்லாம் காரணம், இந்தப் பஞ்சாயத்தைப் பொறுத்தவரையில் திட்டவட்டமான விதிகள் எதுவும் செய்யப் படாததேயாகும். ஏன் இதைப்பற்றி ஒரு சட்டத்தை இந்தச் சபையில் இதுவரையில் சமர்ப்பிக்கவில்லை என்று தெரியவில்லை. இப்போது எங்கும் பஞ்சாயத்து ராஜ்யம் என்று பேசப்படுகிறது. ஆனால் பஞ்சாயத்து ராஜ்யம் அமைக்கப்பட்டு, அதை நடத்தும்

6th March 1961] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

விதத்தைப் பார்த்தால் பல இடங்களில் சங்கடமான நிலைதான் ஏற்பட்டிருக்கிறது. இதற்காக ஒரு தனிப்பட்ட இன்ஸ்பெக்ஷன் அதிகாரி இருக்கவேண்டும். கலெக்டர்களை மட்டில் நம்பிக்கொண்டிருப்பதில் பிரயோஜனமில்லை. கலெக்டர்களுக்கு பலவித வேலைகள் இருப்பதால், இவைகளைக் கவனிக்க முடியாது. ஆகவே அவசியம் ஒரு இன்ஸ்பெக்ஷன் அதிகாரியை இதற்கு நியமித்து, பஞ்சாயத்து நல்லமுறையில் நடக்க திட்டவட்டமான நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்து கூட்டுறவைப் பொறுத்தவரையில் பார்த்தால், எங்கும் கூட்டுறவு பண்ணை (Farming) பற்றி பேசிக்கொண்டு வருகிறோம். இப்படி பேசிக்கொண்டு வருகின்ற அதே நேரத்திலே, உடனடியாக உச்சவரம்பு ( ceiling ) கொண்டு வரவேண்டுமென்றும் பேசிக்கொண்டு இருக்கிறோம். கூட்டுறவு ஸ்தாபனமானது நல்ல முறையில் நடக்க வேண்டுமென்று நாம் விரும்புகிறோம். ஆனால் அதிலே அரசியலைக் கொண்டு வந்து புகுத்தி விடுகிறோம். இம் மாதிரி புகுத்துவதன் காரணமாக சில கஷ்டங்கள் ஏற்படுகின்றன. மூன்று நான்கு தினங்களுக்கு முன்பு நான் படித்தேன். ஒரு இடத்தில் நம்முடைய ரிசர்வ் பாங்கு கவர்னர் ஸ்ரீ எச். வி. ஆர். அய்யங்கார்,

, "It is not in the country's interest that political parties should intrude into the business of Co-operation. I have heard of elections in some Co-operative Banks and Societies being fought on party lines. Nothing can be more fatal to the co-operative spirit than political partisanship." என்று பேசி இருக்கிறார்கள்.

இப்பொழுது என்ன நடக்கிறது என்றால், எல்லாம் அரசியல் காரணத்தினால் இவைகளெல்லாம் நடந்துகொண்டே போகிறது. சமீபத்திலே எங்களுடைய மாவட்டத்தில் ஒரு பாங்கு பிரஸிடெண்டு எலெக்ஷன் நடந்தது. அதில் பார்த்தால் அரசியலை உள்ளே கொண்டுவந்து புகுத்தி, அநேக கார்கள், ஜீப்கள் எல்லாம் வேலை செய்து ஏதோ ஒருவிதமாக நடந்தது. எதைப்பற்றி சொல்லுகிறேன் என்றால், கூட்டுறவு ஸ்தாபனம் நல்ல முறையில் இயங்கவேண்டுமென்றால், அரசியலை கொஞ்சம் அப்புறப்படுத்தி வைக்கவேண்டும். தவிர, உணவு உற்பத்தியை பெருக்குவதற்கு கூட்டுறவு ஸ்தாபனம் வழி செய்யாது என்பதை திட்டவட்டமாக சொல்லிக்கொள்ளுகிறேன். புள்ளி விவரங்களைப் பார்க்கும் பொழுது ஜப்பானில் ஒரு ஏக்கருக்கு 3,750 பவுண்டு நெல் விளைகிறது. அமெரிக்காவில் 3,000 பவுண்டு நெல் விளைகிறது. இந்தியாவில் ஒரு ஏக்கருக்கு 600 பவுண்டு தான் சராசரி விளைகிறது. உணவு உற்பத்தியை பெருக்குவதற்கு தனியார் துறையில் அவர்களுக்கு உற்சாகம் கொடுத்து, முக்கியமாக 'இர்ரிகேஷன் பெஸிலிடீஸ்' நீர்பாசன வசதிகள் வேண்டிய 'பெர்டிலைஸர்ஸ்' ரசாயன உரம் ஆகியவைகளெல்லாம் வேண்டியபடி டயத்தில் கொடுத்தால் தான் உணவு உற்பத்தியை நல்ல விதமாக பெருக்குவதற்கு

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [6th March 1961

இயலும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். சமீப காலத்திலே ஒரு சில மாதங்களுக்கு முன்பு மத்திய சர்க்கார் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். "உணவு அமைச்சர்களை மட்டும் நீங்கள் நம்பி இருப்பதில் பிரயோசனம் இல்லை. உணவு அமைச்சர்களால் தான் தங்கு தடைகள் இருக்கிறது என்று நீங்கள் நினைக்கக் கூடாது. மற்ற அமைச்சர்களும் இதற்கு ஒத்துழைக்க வேண்டும். ஒவ்வொரு டிபார்ட்மெண்டிற்கும் 'கோவார்டினேஷன்' இருக்க வேண்டும். இப்பொழுது 'கோவார்டினேஷன்' போதுமானதாக இல்லை" என்று சொல்லியிருக்கிறார். அப்பொழுது அமைச்சர் அவர் சொல்லியிருக்கிறார் :

"The Ministry of Irrigation and Power is responsible for utilising the water potential, Community Development for food production, Commerce and Industry for more fertilisers, the Health ministry for controlling increase in population, the Railways for transporting staffs and finally, the State Governments for the execution of the works and policies concerning the Food Ministry."

ஆகையால் எல்லா டிபார்ட்மெண்டுகளும் ஒத்துழைக்கவேண்டும். ஒரு டிபார்ட்மெண்டிற்கும் மற்றொரு டிபார்ட்மெண்டிற்கும் சில டயத்தில் 'கோவார்டினேஷன்' **(co-ordination)** கிடையாது. இப்பொழுது எவ்வளவோ செய்திருக்கிறோம். விதைகளெல்லாம் கொடுப்பதற்காக ஏற்பாடுகள் செய்திருக்கிறோம். அப்படிச் செய்திருந்தும் சில விதைப் பண்ணைகள் நல்ல முறையில் இயங்கவில்லை. முன்பு நல்ல விதைப் பண்ணைகள் எடுக்கப்படவில்லை. ஆனால் இப்பொழுது அவைகளெல்லாம் பரிசீலனை செய்து மறுபடியும் விதைப் பண்ணைகளை எடுக்கும்பொழுது நல்ல பிராந்தியங்களில் உற்பத்தியை அதிகரிக்கக்கூடிய இடத்திலே எடுக்க வேண்டும் என்று திட்டவட்டமாக ஒரு உத்தரவு போடப்பட்டிருக்கிறது என்று கேள்விப்படுகிறேன். அதுபற்றி பாராட்டுகிறேன். அதற்கு வேண்டிய வசதிகளையெல்லாம் செய்து கொடுக்க வேண்டும். முக்கியமான 'கிரீன் மென்யூர் விதைகள்' நான் ஒரு வாரத்திற்கு முன்பு கேட்டேன். விதைகள் இல்லை என்று சொன்னார்கள். இப்பொழுதுதான் 'மென்யூர் ஸீட்ஸ்' பசுந்தாள் விதை **(manure seeds)** எல்லாம் விதைக்கவேண்டும். எப்பொழுது கொடுப்பது. இவைகளையெல்லாம் முன்னிட்டே தேவைப்படும் பொழுது உடனுக்குடன் கொடுக்காத காரணத்தினால் சில பிராந்தியங்களில் விவசாயிகளுக்கு உற்சாகம் குன்றிவிடுகிறது. விவசாயத்திற்கு 'டாப் பிரையாரிடி' **(top priority)** முதல் இடம்) கொடுக்கவேண்டும், அவர்களுக்கு வேண்டிய உதவிகளை உடனுக்குடன் கொடுப்பதற்கு சர்க்கார் முன்வரவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

விதைப்பண்ணைகள் பற்றி மிகவும் சிந்திக்க வேண்டிய சமாசாரம். விதைப்பண்ணைகளை பஞ்சாயத்துக்களுக்குக் கீழே விடப்போவதாகக் கேள்விப்படுகிறேன். பஞ்சாயத்துக்களுக்குக் கீழே இந்த விதைப்பண்ணைகள் இயங்கினால் அவைகள் உருப்படுமா ? இது ஒரு முக்கியமான சமாசாரம். இதைப்பற்றி நன்றாக

சிந்திக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். விவசாயப் பண்ணைகள் விவசாய டிபார்ட்மெண்டின்கீழ் நிறுவப்படுவதுதான் நலமே ஒழிய, பஞ்சாயத்து யூனியன்கள் இதை சூபர்வைஸ் செய்து விதைகள் கொடுப்பதைவிட, விதைகள் கொடுக்காமல் இருப்பதே நல்லது. இது மிகவும் கவனிக்க வேண்டிய விஷயம். பழையபடியே விதைப்பண்ணைகள் விவசாய டிபார்ட்மெண்டின் கீழ் கண்ணும் கருத்துமாக கவனிக்கப்படுவதுதான் நல்லது . . . . .

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பஞ்சாயத்துக் களுக்கு கொடுக்கிறது என்றால் சாதாரணமாக கிராமங்களில் இருக்கிற விதைப்பண்ணைகளைதான் பஞ்சாயத்துக்களின் பொறுப்பின்கீழ் விடலாம் என்று யோசனை.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : அப்படியானால் சரி. பஞ்சாயத்துகளுக்கு விதைப்பண்ணைகளை கொடுப்பது என்றால், அதனால் என்ன கெடுதல் ஏற்படுமோ என்று கொஞ்சம் பயந்து விட்டேன். அம்மாதிரி இல்லாமல் இருப்பதைப் பற்றி சந்தோஷம்.

கடைசியாக நான் என்ன சொல்ல விரும்புகிறேன் என்றால், விவசாயிகள் பலவிதமாக கஷ்டப்படுகிறார்கள். அவர்களுக்கு வேண்டிய வசதிகளையெல்லாம் டயத்தில் செய்துகொடுக்க வேண்டும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். நாம் எவ்வளவு தூரம் பலவிதங்களில் முன்னேறிவந்தாலும்கூட, சிறு கைத்தொழில்களிலும் நாம் முன்னேறவேண்டும். அதற்கு வேண்டிய வழிகளையெல்லாம் செய்யவேண்டும். எவ்வளவு தூரம் கஷ்டப்பட்டு நாம் சிறு சேமிப்பு மூலம் நிதி சேர்த்தாலும் சரி, நம்முடைய பிராந்தியத்திற்கு போதுமான நிதி உதவி மத்திய சர்க்கார் கொடுக்காமல் இருப்பதுபற்றி நான் வருந்துகிறேன். நம் ராஜ்யம் முன்னேறவேண்டுமானால் முக்கியமாக பெரிய தொழிற் சாலைகளெல்லாம் ஏற்படவேண்டும். அதற்கு வேண்டிய உதவிகளை யெல்லாம் மத்திய சர்க்கார் கொடுக்கவில்லை. கோஸ்டல் ரோடு (Coastal Road) போடுவதற்கு நமக்கு வேண்டிய உதவிகள் செய்து கொடுக்கவில்லை. 'எலெக்டிரிஸிடி எக்ஸ்பான்ஷன்' (மின் சார விஸ்தரிப்பு) நாமே செய்து கொண்டோமே ஒழிய, அதற்கு வேண்டிய உதவியை மத்திய சர்க்கார் நமக்குக் கொடுக்கவில்லை. தவிர, கன ரகத் தொழிற்சாலைகள் ஏற்படுத்துவதற்கும், துறை முகங்களையெல்லாம் அபிவிருத்தி செய்வதற்கும் வேண்டிய வசதிகளையெல்லாம் செய்யாத காரணத்தினாலே, மற்ற மாகாணங் களுக்கும் நம்முடைய மாகாணத்திற்கும் எவ்வளவோ வித்தி யாசம் இருக்கிறது. வாழ்க்கைத்தரம் குறைந்துகொண்டு போகிறதே ஒழிய, வாழ்க்கைத்தரம் அதிகமாக உயரவில்லை என்று நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதைச் செய்கிறோம், இதைச் செய்கிறோம் என்று சொல்லிக்கொண்டே போவதில் பிரயோசனம் இல்லை. கண்டிப்பாக திட்டவட்டமாக நாங்கள் சொன்ன யோசனைகளை நன்றாக எடுத்துக்கொண்டு பொருளா தாரத் துறையில் நம்முடைய பிராந்தியம் முன்னேறுவதற்கு

எவ்வளவு செய்யவேண்டுமோ அவ்வளவும் செய்யவேண்டும். இல்லாவிட்டால் நிலைமை உங்களுக்கு பெரிய கஷ்டத்தைத்தான் விளைவிக்கும். நீங்கள் கண்ணும் கருத்துமாக இருந்து உடனடியாக வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்ளுகிறேன்.

**MR. SPEAKER** : இன்னும் 190 நிமிஷங்கள் பாக்கி இருக்கிறது. பத்தொன்பது அங்கத்தினர்கள் பேசுவதற்கு பெயர் கொடுத்திருக்கிறார்கள். ஒரு அங்கத்தினருக்கு 10 நிமிஷம் வீதம் கணக்கு சரியாக இருக்கிறது. ஒவ்வொரு அங்கத்தினருக்கும் பேசுவதற்கு 10 நிமிஷங்கள் ஒதுக்கி வைத்திருக்கிறேன். மணி அடித்ததும் தயவுசெய்து அங்கத்தினர்கள் உட்கார வேண்டும் என்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

* SRI A. S. DORAISWAMI REDDIAR : அன்பார்ந்த சபா நாயகர் அவர்களே, நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்த வரவு செலவுத் திட்டத்தை ஆதரித்து சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். இந்த வரவு செலவுத் திட்டத்தில் 'ஒன்றும் இல்லை, ஒன்றும் இல்லை' என்று எதிர்க்கட்சிக்காரர்கள் எல்லாம் பேசியிருக்கிறார்கள். நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்த வரவு செலவுத் திட்டம் தமிழில் ரொம்பவும் அழகாகவும், சுலபமாக குழந்தைகள்கூட அறிந்துகொள்ளும்படியான எளிய தமிழ் நடையிலே அமைந்திருக்கிறது. (இந்த சமயத்தில் ஸ்ரீ எஸ். எம். அண்ணாமலை தலைமை வகித்தார்.) நான்கு வருஷ காலமாக யாதொரு வரியும் போடாமல் வரவு செலவுத் திட்டத்தை நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கிறார்கள். அதோடுகூட சென்ற வரவு செலவுத் திட்டத்திலே சம்பளக் கமிஷன் சிபார்சை ஒட்டி உத்தியோகஸ்தர்களுக்கு அதிகச் சம்பளம் கொடுப்பதற்கு நிதி ஒதுக்காமல் இருந்தபோதிலும்கூட, இந்த பட்ஜெட் திட்டத்தில் அதிகம் ஒதுக்கிக் கொடுத்திருக்கிறார்கள். நிதி அமைச்சர் அவர்கள் இம்மாதிரி பட்ஜெட் சமர்ப்பித்ததற்காக அவரை நாம் வாயாரப் புகழவேண்டும். நமது நிதி அமைச்சர் அவர்கள் நமது மாநிலத்திலேயே இருந்து 4 வருஷங்களுக்கு பட்ஜெட் சமர்ப்பித்ததில் யாதொரு புதிய வரியையும் போடாமல் இருப்பதுபற்றி எதிர்க்கட்சித் தலைவர் அவர்கள் சந்தோஷப்பட்டாலும், அடுத்த தேர்தல் ஆனவுடனேயே வரி போடுவார் என்று இப்பொழுதே சொல்லுகிறார்கள். தேர்தலுக்காகத்தான் வரிபோடவில்லை என்று சொல்லுகிறாரே? நான்கு வருஷமாக போடவில்லையே? அப்படியிருக்கும் பொழுது இந்த வருஷம் மாத்திரம் தேர்தலுக்காக வரி போடவில்லை என்று எப்படி சொல்லுகிறார் என்று தெரியவில்லை.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : இவர்கள் போடாவிட்டால் அவர்கள் மத்திய சர்க்கார் போடுகிறார்களே ?

SRI A. S. DORAISWAMI REDDIAR : எதிர்க் கட்சித் தலைவர் அவர்கள் பார்லிமெண்டிற்குப் போனால் அங்கு வரி போடக்கூடாது என்று சொல்லலாம். இப்பொழுது நம் மாநிலத்

தைப்பற்றி சொல்லுகிறேன். நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் நம்முடைய மாநிலத்தில் வரி இல்லாமல் பட்ஜெட் சமர்ப்பித் திருப்பது பற்றி சந்தோஷப்படுகிறேன். மத்திய சர்க்காருக்கு அவர்கள் போகப்போகிறார் என்று நான் கேள்விப்படுகிறேன். (சிரிப்பு). அவர்கள் மத்திய சர்க்காருக்கு போகக்கூடாது என்று கேட்டுக்கொள்ளுகிறேன். முதல் அமைச்சர் அவர்களையும் அவரை விடாமல் இங்கேயே வைத்துக்கொள்ளும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : அங்கு போனாலும் நமக்கு வேண்டிய உதவிகளையெல்லாம் கொடுப்பார்.

Sri A. S. DORAISWAMI REDDIAR : உதவிகள் செய்வார். ஆனாலும் அவர் இங்கேயே இருக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். தமிழரசுக் கழகம் தமிழுக்காக ரொம்பவும் கஷ்டப்படுகிறது என்று சொல்லுகிறார்கள். தமிழரசுக் ககழத்திற்கு இருக்கும் ஆர்வத்தைவிட நிதி அமைச் சருக்கு தமிழில் ஆர்வம் அதிகம். கேள்விப்பட்டியலில் தமிழ் நாடு சட்டசபை என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. தமிழிலே அவருக்கு ரொம்ப ஆர்வம் இருப்பதினால் கோவைக் கம்பரை 'கவர்ண்மெண்டு விப்பாக்' நியமித்திருக்கிறார்கள். அவருக்கு தமிழில் அவ்வளவு ஆர்வம் இருக்கிறது. விலை ஏறுகிறது, விலை ஏறுகிறது என்று சொல்லுகிறார்களே? விலை ஏறுவது இயற்கை. விலை ஏறுகிறது என்று எதிர்க்கட்சித் தலைவர் அவர்கள் சொல்லுகிறார்களே தவிர, அதைத் தடுக்க என்ன செய் வது என்று பரிகாரம் சொல்லவில்லை.

எதிர்க்கட்சித் தலைவர் விலைவாசிகள் உயர்ந்து போய்விட்டன என்று சொல்லுகிறார். இப்பொழுது ஒரு படி அரிசி ஒரு ரூபாய்க்கு விற்கிறது. இதே எட்டணாவுக்கு விற்றால் அவரே கூச்சல் போடு வார். விலை ஏறுவது இயற்கை. மார்க்கெட்டிலே சரக்கு வந்தால் விலை தானாகவே இறங்கும். நான் சின்னப் பையனாக இருக்கும் பொழுது, அதாவது 10 அல்லது 15 வயது வரையிலே க்ஷவரத்திற்கு அரை அணாத்தான் கொடுத்து வந்தேன். (சிரிப்பு). இப்பொழுது கிராப் செய்வதற்கு 8 அணா கொடுக்கவேண்டியிருக்கிறது. இன்னும் சில இடங்களில் 2 ரூபாய் வரை கொடுக்கவேண்டியிருக்கிறது. மேல் நாடுகளுக்குச் சென்று வந்த நிதி அமைச்சர் அவர்கள் 15 ரூபாய் கொடுத்திருக்கிறார்கள். அந்த நாட்டுக்கும் நம் நாட் டுக்கும் எவ்வளவு ஏற்றத்தாழ்வு பாருங்கள். ஆகையால் விலை ஏறுவதும் இறங்குவதும் இயற்கையே. விலை ஏறிப்போச்சு, விலை ஏறிப்போச்சு என்று சொன்னால் மாத்திரம் போதாது. விலைவாசி யைக் குறைப்பதற்கு தக்க யோசனைகள் சொல்லவேண்டும்.

அடுத்தபடியாக, கல்விக்காக நமது நிதி அமைச்சர் எவ்வளவோ செய்திருக்கிறார். இந்தியாவிலேயே கல்வித் துறை யில் நமது மாகாணம் எவ்வளவோ முன்னேற்றம் அடைந்திருக் கிறது என்பதைப் பார்த்துத்தான் நமது கல்வி டைரக்டருக்கு "பத்ம ஸ்ரீ" பட்டம் வழங்கியிருக்கிறார்கள். ஏழைப் பிள்ளை

[Sri A. S. Doraiswami Reddiar] [6th March 1961

களுக்கு மதிய உணவுக்காக சென்ற ஆண்டு 84 லட்சம் ரூபாய் வரை செலவு செய்திருக்கிறோம். அதற்காக இப்பொழுது 135 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதுவரையிலும் தாழ்த்தப் பட்டவர்களுக்கு கல்விச் சலுகை கொடுக்கப்பட்டு வந்தது. இப்பொழுது பொருளாதார அடிப்படையில் எல்லா ஏழை மாண வருக்கும் கல்விச் சலுகை அளிப்பதற்கு திட்டம் கொண்டு வந்திருக்கிறார்கள். அதேபோல, வியாபாரிகள் சம்பந்தப்பட்ட வரையில் ரூ. 10,000 முதல் 25,000 வரை கணக்கு வைக்காமல் உத்தேசமாக வரி செலுத்தக்கூடிய சலுகை இருந்தது. இப்பொழுது ஆண்டு விற்பனை 50,000 ரூபாய் வரை உள்ளவர்களுக்கும் இச் சலுகையை வழங்கியிருக்கிறார்கள். இந்தச் சலுகையை எல்லா வியாபாரிகளும் போற்றுகிறார்கள்.

இந்த வரவு செலவுத் திட்டம் உண்மையிலேயே நல்ல முறையில் அமைந்திருக்கிறது. அப்படியிருந்தும் இதிலே ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை என்று சொன்னால் என்ன அர்த்தம்? வரவு செலவுத் திட்டத்திலே என்ன இருக்கும்? சினிமாவா இருக்கும்? அல்லது நாவலா இருக்கும்? (சிரிப்பு) வரவு செலவுத் திட்ட விளக்க நூல் ஒன்றும் கொடுத்திருக்கிறார்கள். நான் அதை இரண்டு தடவை படித்தேன். வரவு செலவுத் திட்டம் என்றால் என்ன, அதை எப்படிப் படிக்கவேண்டும் என்றெல்லாம் விளக்கம் கொடுத்திருக்கிறார்கள். நல்ல நல்ல திட்டங்களை எல்லாம் சேர்த்திருக்கிறார்கள். சென்ற வருஷத்திலே என்னென்ன செய்தோம், இந்த வருஷத்திலே என்னென்ன செய்யப்போகிறோம் என்பதைப் பற்றி மிகவும் அழகாக இந்த பட்ஜெட்டிலே எழுதியிருக்கிறார்கள். இதை நாம் எல்லோரும் போற்றவேண்டும். ஆயிரம் நாவு படைத்த ஆதிசேஷனே இதைப் போற்றும் வகையில் அமைந்திருக்கிறது. இதை எல்லாம் விட்டு விட்டு, ஒன்றும் இல்லை, ஒன்றும் இல்லை என்று சொன்னால், பட்ஜெட்டிலே என்ன இருக்கவேண்டும் என்று நான் கேட்கிறேன். இப்படிச் சொல்லிக் கொண்டேயிருந்தால் கடைசியில் ஒன்றுமில்லாமலே போய்விடும். புதிய வரி போடாமலேயே திட்டத்தை தயாரித்திருக்கிறார் நமது நிதி அமைச்சர்.

நாடு செழிமை அடையவில்லை என்று சொல்லுகிறார்கள். என்னுடைய செங்கற்பட்டு ஜில்லாவுக்கு வந்து பார்த்தால், அது எவ்வளவு முன்னேற்றம் அடைந்திருக்கிறது என்பது நன்கு தெரியும். அங்கே என்ன தொழில் இல்லை. திருகாணியிலிருந்து மோட்டார் கார் வரை திருவொற்றியூரிலே செய்கிறார்கள். நேஷனல் கார்பன் கம்பெனி இருக்கிறது, வெஸ்ட் இந்தியா மாச் பாக்டரி இருக்கிறது, சௌத் இந்தியா கம்பெனி இருக்கிறது, கார்பொரண்டம் யுனிவர்சல் இருக்கிறது, இன்னும் எத்தனையோ கம்பெனிகள் இருக்கின்றன. நான் என் கையில் எங்கள் ஜில்லாவிலுள்ள கம்பெனிகளை எல்லாம் குறித்து வைத்திருக்கிறேன். ஆனால் 10 நிமிஷத்திற்குள் இதை எல்லாம் படித்துச் சொல்ல முடியாது. எங்கள் ஜில்லாவிலே மூன்று டெக்ஸ்டைல் மில்கள் இருக்கின்றன. கரும்பு ஆலை இருக்கிறது.

6th March 1961]

SRI A. V. P. ASAITHAMBI : காங்கிரஸ் கமிட்டி தலைவர்கூட உங்கள் ஜில்லாவில்தான் இருக்கிறார். (சிரிப்பு).

SRI A. S. DORAISWAMI REDDIAR : காங்கிரஸ் கமிட்டி தலைவர் என்ன, மந்திரி பக்தவத்சலம்கூட எங்கள் ஜில்லாவைச் சேர்ந்தவர்தான். அவர் எல்லா காபினெட்டுகளிலும் மந்திரியாக இருந்து வந்திருக்கிறார். அவர் திறமைசாலி. நல்ல ராஜ தந்திரி. ஆலோசனை சொல்லுவதில் மிகவும் கெட்டிக்காரர். அவரைப் பார்த்துப் பொறாமைப்படுகிறார்கள். (சிரிப்பு) நிதி மந்திரியும் இருக்கிறார். ஏன் அவர்கள் எல்லோரும் நிரந்தரமாய் இருக்கக் கூடாது? எங்கள் ஜில்லாவில் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ அளகேசன் இருக்கிறார். அவர் வந்த பிறகு காங்கிரஸ் கட்சி பலப்பட்டிருக்கிறது. இதை எல்லாம் பார்த்து பொறாமைப் படுவதில் பிரயோஜனம் இல்லை.

நான் சென்ற 4 வருஷங்களாக இந்த சபையில் இருக்கிறேன். 1957-க்கும் 1961-க்கும் எவ்வளவோ வித்தியாசம் இருக்கிறது. நான் 8-வது மைலிலிருந்து வருகிறேன். இப்பொழுது வருகிற வழியிலே பார்த்தால் முன்பு பொட்டைக் காடாக இருந்த இடத்திலெல்லாம் அழகான கட்டிடங்கள் வானளாவ கட்டப்பட்டிருக்கின்றன. பெரிய பெரிய கட்டிடங்களைக் கட்டி இருக்கிறார்கள். என்னுடைய தொகுதியில் ஒரு கிராமத்தை சர்க்கார் எடுத்துக் கொண்டு அங்கே கனரகத் தொழில் பயிற்சிக்கூடம் ஒன்று ஏற்படுத்தியிருக்கிறார்கள். ரெயில்வே கோச் பாக்டரி இருக்கிறது. பின்னி கம்பெனி இருக்கிறது. சென்ற நாலு வருஷத்திலே பார்த்தால் எத்தனையோ பிரம்மாண்டமான தொழிற் சாலைகள் ஏற்பட்டுள்ளன. ஆகவே, ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை என்று இங்கேயே உட்கார்ந்துகொண்டு சொல்லுவதில் என்ன அர்த்தமிருக்கிறது. நேரில் எங்கள் ஜில்லாவுக்கு வந்து எல்லோரும் பார்க்கட்டும். என் தொகுதியிலே பள்ளிக்கூடம் இல்லாத கிராமமே கிடையாது. மின்சாரம் இல்லாத கிராமமே கிடையாது. பஞ்சாயத்து இல்லாத கிராமமே கிடையாது. குடிதண்ணீர் இல்லாத கிராமமே கிடையாது. எனக்கு இப்பொழுது 66 வயது ஆகிறது. 1957-ல் என்னுடைய தொகுதிக்குப் போய் பார்த்திருக்கிறேன். இப்பொழுது அங்கே போய்ப் பார்த்தால் "இந்த கிராமம் தான் முன்னால் இருந்ததா" என்று சொல்லக்கூடிய அளவுக்கு எவ்வளவோ மாறிப் போயிருக்கிறது. அடையாளமே தெரிய வில்லை. அவ்வளவு முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது.

சைதாப்பேட்டையிலிருந்து சென்னை வரையில் ஏதாவது காலியாக இருக்கிறதா? சர்க்கார் 5 தாசில்தார்களைப் போட்டு நிலங்களை தொழிற்சாலை நிறுவுவதற்காக வாங்கிக் கொடுத்துக் கொண்டே இருக்கிறார்கள். புதிய புதிய தொழில்களை ஏற்படுத்துவதற்காக என்னவெல்லாமோ செய்து வருகிறார்கள். கிண்டியிலே ஒரு தொழிற்பேட்டை இருப்பதுபோல் தனியார் துறையிலே திருவொற்றியூரிலும் செய்யப்

[Sri A. S. Doraiswami Reddiar.] [6th March 1961

போகிறார்கள். என்னுடைய தொகுதியிலே பள்ளிக்காணி கிராமத்திலே 2,000 ஏக்கர் நிலமிருக்கிறது. இது சும்மாக் கிடக்கிறது. ஏற்கெனவே ஒரு ஸ்கீம் போட்டார்கள். ஆனால் அது நிறைவேற்றப்படவில்லை. இந்த 2,000 ஏக்கர் நிலத்தையும் சர்க்காரே வாங்கி நல்ல தொழில்களுக்கு உபயோகம் செய்தால் நலமாக இருக்கும். ஆகவே அதைச் செய்யும்படிக் கேட்டுக்கொள்கிறேன்.

சென்னை நகரத்துக்குப் பக்கத்தில் 5 கோடி ரூபாய் செலவில் சர்க்கார் இரண்டு புதிய நகரங்களை விஸ்தரிக்கப் போகிறார்கள். ஏற்கெனவே சென்னையைச் சுற்றி சில நகரங்கள் இருக்கின்றன. இவைகளுக்கு குடிதண்ணீர் வசதி, சுகாதார வசதியில்லை. ஐந்து கோடி ரூபாய் செலவு செய்து புதிதாக இரண்டு நகரங்கள் நிர்மாணிப்பதற்கு முந்தி இருக்கிற இடங்களுக்கு குடி தண்ணீர் வசதி, சுகாதார வசதி செய்து கொடுத்துவிடவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். பிறகு புது நகரங்கள் ஏற்படுத்துவது நலம்.

எங்கள் ஜில்லா தலைநகரத்திலே ஒரு தலைமை ஆபீஸும் ஒன்றும் கிடையாது. காஞ்சிபுரத்தை ஜில்லா தலைநகரமாக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

(இச்சமயத்தில் மணி அடிக்கப்பட்டது.)

* **SRI S. SADASIVAM** : மதிப்பிற்குரிய சபைத் தலைவர் அவர்களே, இன்றைய தினம் நமது நிதி அமைச்சர் அவர்கள் கொண்டுவந்த நிதி நிலை அறிக்கையின்மீது ஒருசில வார்த்தைகள் பேச எனக்கு அனுமதி கொடுத்த உங்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். கடந்த மூன்று நாட்களாக இங்கே நடக்கும் இந்த விவாதத்தில் கலந்துகொண்ட பெரும் பகுதியான என் கட்சியைச் சேர்ந்த அங்கத்தினர்கள் இந்த வரவு செலவுத் திட்டத்தை வரவேற்றும், எதிர்க் கட்சித் தோழர்கள் இந்த நிதி நிலை அறிக்கையானது ஒரு தேர்தல் பிரசார அறிக்கை என்ற அடிப்படையில் பேசியிருப்பதைக் கண்டு அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். ஏனென்றால் என்போன்ற ஊழியர்களும், என்னைச் சேர்ந்த ஆளும் கட்சியும், இந்த அமைச்சரவையும் இந்தத் தேர்தலை எந்த முறையிலே நடத்தவேண்டுமென்ற அடிப்படையிலே ஒரு நல்ல அபிப்பிராயத்தை மக்களுக்கு எடுத்துக்காட்டி இந்த மன்றத்திலே பேசினதை நான் வரவேற்கிறேன். வல்லரசுகள் என்று சொல்லக் கூடிய பிரிட்டன், அமெரிக்கா போன்ற நாடுகளிலே தேர்தல் நடந்ததை நாம் பத்திரிகை வாயிலாக அறிந்திருக்கிறோம். அங்கே தேர்தல் நடக்கும்பொழுது ஆளும் கட்சியினர் தங்களுடைய ஆட்சி காலத்திலே தாங்கள் என்னென்ன திட்டங்களை செய்து முடித்திருக்கிறார்கள், என்னென்ன திட்டங்களைச் செய்யப் போகிறார்கள் என்று மக்களுக்கு எடுத்து உரைக்கிறார்கள். அம்மாதிரி நல்லதொரு வாய்ப்பை நாமும் பெற்றிருக்கிறோம் என்பதை எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் இம்மன்றத்தில் எடுத்துரைத்திருக்

6th March 1961] [Sri S. Sadasivam]

கிறார்கள் என்பதைக்கண்டு மகிழ்கிறேன். ஆகவே அந்த முறையில் தேர்தலை நடத்த வேண்டியதுதான். அதேபோல் எதிர்கட்சியினரும் தங்களுடைய திட்டங்களை மக்களிடத்தில் வைத்து தேர்தல் பிரசாரம் செய்வதுதான் நல்லமுறை. மக்களிடத்தில் சொல்வதற்கும் தயாராக இருக்க வேண்டும் என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். எல்லாக் கட்சியினரும் தேர்தல் காலங்களில் தங்களுடைய திட்டத்தை மக்களிடத்தில் எடுத்துச் சொல்லி, வெற்றி பெறவேண்டும் என்பதுதான் என் அவா. அந்த முறையிலேயே எல்லோரும் தேர்தலை வெற்றிகரமாக நடத்துவதற்கு முன் வரவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இந்த அறிக்கையில் நல்ல இரண்டு அம்சங்களை கொண்டு வந்திருப்பதை நான் வரவேற்கிறேன். ஒன்று 11-ஆவது வகுப்பு அதாவது எஸ்.எஸ்.எல்.சி. வரையில் ஏழை மாணவர்களுக்கு இலவச கல்வி அளிக்கப்படும் என்பது. அது மிக மிக வரவேற்கக் கூடியதுதான். அதே போன்று கணக்குகளை சரியாக வைத்துக் கொள்ள முடியாத வியாபாரிகளுக்கு, அதாவது 25 ஆயிரம் ரூபாய் வரையில் இது வரையில் கணக்கு இல்லாதவர்களுக்கு சலுகை காட்டப்பட்டு வந்ததை இப்பொழுது 50 ஆயிரம் ரூபாய் வரையில் வியாபாரம் செய்கிறவர்கள் கணக்கு வைத்துக்கொள்ள வேண்டாம் என்று சொல்லி இருப்பது மிகவும் வரவேற்கத்தக்க அம்சமாகும்.

இந்த ஆண்டு நிதி நிலை அறிக்கையில் விவசாயத்திற்கு பெரும் பங்கு கொடுத்திருப்பதைக் கண்டு நான் மகிழ்ச்சி அடைகிறேன். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் கொடுக்கப்பட்ட முக்கியத்துவத்தைக் காட்டிலும் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் அதிகமாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அத்துடன் தொழில் துறைக்கு இந்த ஆண்டில் அதிகமாக ஒதுக்கப்பட்டிருப்பது மிகவும் வரவேற்கக்கூடிய ஒரு அம்சமாகும். விவசாயத் துறையில் முன்னேற்றம் காண பல புதிய திட்டங்கள் அமைக்கப் பட்டிருந்தும் இந்த ஆண்டில் மூன்று மிக முக்கியமான அம்சங்களை எடுத்து நிறைவேற்றுவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதில் முக்கியமானது பரம்பிக்குளம் திட்டம். இந்தத் திட்டம் இதில் அமைந்திருப்பதைக் கண்டு வரவேற்கக்கூடியதாக இருக்கிறது. ஏனென்றால் இந்த திட்டத்தினால் சுமார் 2-½ லட்சம் ஏக்கருக்கு நீர்ப்பாசன வசதி கிடைக்கக்கூடிய வாய்ப்பு ஏற்படப் போவதைக் கண்டு அதை வரவேற்காமல் இருக்க முடியாது. வரப் போகிற மூன்றாவது திட்ட காலத்தில் போதிய நிதி இருக்குமோ இருக்காதோ என்று நினைக்கும்படியாக இருந்தது. அதனால் மத்திய தர நீர்ப்பாசன திட்டத்தை எடுத்துக்கொள்ள முடியுமோ முடியாதோ என்று இருந்ததை கவர்னர் உரையிலும் இந்த உரையிலும் அதைப்பற்றி விளக்கமாக எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படிப்பட்ட ஒரு சூழ் நிலை வந்திருப்பதைக் கண்டு நான் வரவேற்கிறேன். இன்னும் நடுத்தர பாசனங்கள் இருக்கின்றன. அவைகளை எடுத்துக் கொள்வதற்கு ஒரு உறுதியான அமைப்பை எடுத்துக்கொண்டிருப்பதைக் கண்டு மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். நமது நிதி அமைச்சர் அவர்கள் மத்திய அராசாங்க

திட்ட அமைச்சர் அவர்களை கலந்து முடிவு செய்து நல்ல முறையில் அமைந்துள்ள திட்டங்களை எடுத்து நிறை வேற்றுவதற்கு என்று நமது முதல் அமைச்சர் அடங்கிய ஒரு நிரந்தரக் குழுவை அமைத்து திட்டங்களை சரிவர நிறைவேற்றுவதற்கு என்று எடுத்துக்கொண்ட நடவடிக்கை ரொம்பவும் வரவேற்கக்கூடிய அம்சமாகும். அந்த வகையில் என் பகுதியில் மூன்ருவது ஐந்தாட்டுத் திட்ட காலத்தில் பல திட்டங்களை எடுத்து நிறைவேற்றப்படும் என்று கருதுகிறேன். அந்த முறையில் இஞ்சினியரிங் இலாகாவினரால் மிகச் சிறந்த திட்டம் எனக்கருதும் எங்கள் தொகுதியிலுள்ள நொய்யல், குடகனுறு போன்ற திட்டங்களை எடுத்து நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதுபோன்று பல சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களும் இருக்கின்றன. அவைகளுக்கு அதிகப்படியான தொகை ஒதுக்காமல் இருப்பதால் அவைகள் நிறைவேற்றப்படாமல் இருக்கின்றன. அந்த திட்டங்கள் எல்லாம் தடைப்பட்டிருக்கின்றன. அவைகளையெல்லாம் எடுத்து நிறைவேற்ற வேண்டும்.

தற்போது பல கிணறுகளை வெட்டக்கூடிய திட்டம் இருக்கின்றன. கிணறுகளை அதிகமாக உபயோகப்படுத்தினுல் அதிலுள்ள நீர் ஊற்று குறைந்து போய் விடுகிறது என்று சொல்லப்படுகிறது அப்படிக் குறையும் நீர் மட்டத்தை ஆழத்தில் இருந்து எடுக்க குழாய் கிணறு திட்டங்களை அமைக்கப்பபோவதாகக் கேள்விப்பட்டேன். அதை நான் ரொம்பவும் வரவேற்கிறேன். அது சம்பந்தமாக நான் ஒன்றை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். கிணற்றிலுள்ள ஊற்று நீர் கீழே போகாமல் இருக்க அமைச்சர் அவை திட்டமிட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது, அத்துடன் நானும் என்னுடைய கருத்தைச் சொல்ல விரும்புகிறேன். அதிகப்படியாக குளங்கள் இல்லாத இடங்களில் இப்பொழுது கிணறுகளை வெட்டிக்கொண்டிருக்கிருர்கள். அப்படி கிணறுகள் வெட்டப்படும் இடங்களில் குளங்கள் இல்லாத காரணத்தால் மழை பெய்யக்கூடிய காலத்தில் ஆற்றில் வரக்கூடிய தண்ணீர் எல்லாம் சின்ன ஓடைகள் வழியாக ஆறுகளில் கலந்து கடலில் போய் விழுகின்றன. அதனுல் தண்ணீர் தேக்கம் இல்லாமல் அடிமட்ட ஊற்று வரண்டு போய் விடுகின்றன. ஆகவே அந்த முறையில் மழைத் தண்ணீரெல்லாம் கடலில் போய் விழாத படி அவைகளை தேக்கி வைத்துக்கொள்வதற்கு, சிறு சிறு அணைகளைக் கட்டி வைத்துக்கொண்டால் அதற்கு "செக் பண்ட்ஸ்" என்றுகூட சொல்வார்கள், தண்ணீர் அங்கே தேங்கி நின்று கிணற்று ஊற்றுத் தண்ணீர் ரொம்பவும் கீழே போகாமல் மேல் மட்டத்திலேயே இருக்கும். இப்படியே கோயம்பத்தூரில் பல இடங்களில் அமைத்திருக்கிருர்கள். இந்த திட்டத்தை பொது மராமத்து இலாகா எடுத்துக்கொண்டு நிறைவேற்ற முடியாது என்று கருதினுல் அரசாங்கத்தை இந்த திட்டத்தை எடுத்து நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதேபோன்று வரண்ட பிரதேசங்களில் குழாய்க் கிணறுகளை அமைத்து வருகிருர்கள் அப்படியே என் தொகுதி போன்ற எல்லா வரண்ட

பிரதேசங்களிலும் அதிகப்படியான குழாய்க் கிணறுகளை அமைக்க வேண்டிய வழிவகை செய்யவேண்டும் என்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

கால்நடை சம்பந்தமாக பேசும்போது விவசாயிகளுக்கு பெரும் உருத்துணையாக இருக்கக்கூடியது கால்நடை. கால்நடை வளர்ப்பில் நமது அரசாங்கம் இரண்டாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் வெற்றி கண்டிருக்கிறார்கள். பல சாதனைகளைச் செய்திருக்கிறார்கள். இரண்டாவது திட்ட காலத்தில் 39 செயற்கை முறை கருத்தரிப்பு நிலையங்களை ஏற்படுத்தி இருக்கிறார்கள். இந்த நிலையங்களில் பயனைப்பற்றி அந்தப் பகுதியிலிருந்து வரக்கூடிய மக்களுக்குத்தான் நன்றாகத் தெரியும். அவர்கள்தான் இவைகளைப்பற்றி நன்றாக உணர முடியும். வேறு யாரும் அந்த அளவில் உணர முடியாது. இந்த நிலையங்கள் விவசாயத்திற்கு ஒரு நல்ல உருத்துணையாக இருக்கிறது. இப்படிப்பட்ட நிலையங்களுக்கு அங்கங்கே கட்டிடங்கள் இல்லை என்று சொல்லப்படுகிறது. இவைகளுக்கும் கால்நடை ஆஸ்பத்திரிகளுக்கும் அரசாங்கம் வாடகைக் கட்டிடத்தைதான் அமைத்திருக்கிறார்கள். அவைகளுக்கு எல்லாம் அரசாங்கம் சொந்தக் கட்டிடங்களைக் கட்டிக் கொடுத்தால் எவ்வளவோ நலமாக இருக்கும். வாடகைக் கொடுக்கக் கூடிய பணத்தை வைத்துக்கொண்டே சொந்தக் கட்டிடமாக கட்டிக் கொள்ளலாம். ஆகவே இதைப்பற்றி அரசாங்கம் கொஞ்சம் யோசனை செய்து அவைகளுக்கு எல்லாம் சொந்தக் கட்டிடம் கட்டிக்கொடுக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இதற்கு அந்தப் பகுதியிலுள்ள மக்கள் ஒரு பங்கு பணம் கொடுக்கக்கூட தயாராக இருக்கிறார்கள். ஆகவே அவர்களிடமிருந்து அதிகப்படியான தொகை வாங்காமல் குறைவாக தொகை வாங்கி, அரசாங்கமே அதிகப்படியாக தொகை ஒதுக்கி அந்த ஆஸ்பத்திரிகளுக்கு சொந்தக் கட்டிடங்களைக் கட்டிக்கொடுக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டு அதிக நேரம் பேசுவதற்கு இல்லாததால் இத்துடன் என் வார்த்தைகளை முடித்துக் கொள்ளுகிறேன்.

**Sri M. KARUNANITHI :** சட்ட மன்றத் தலைவர் அவர்களே, 1961-62-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையின்மீது என்னுடைய கருத்துக்களை இங்கே கூறுவதற்கு விரும்பி நிற்கிறேன். இந்த நிதி நிலை அறிக்கையினுடைய துவக்கத்தில் "தமிழ் நாடு சட்ட மன்றம்" என்று குறிப்பிட்டிருப்பதை மிகவும் பெருமையுடன் அந்த அறிக்கையை முதலில் வாசித்த கனம் அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள். ஆனால் இந்த நிதி நிலை அறிக்கையின் ஆங்கில மொழி பெயர்ப்பு எங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த அறிக்கையை பிரிக்கிற நேரத்தில் அதைக் கண்டு நாம் அகமகிழ்வதற்கு வழி இல்லை. அது வேதனையைத் தருவதாக இருக்கிறது என்பதை இங்கே குறிப்பிட விரும்புகிறேன். "தமிழ் நாடு சட்ட மன்றம்" என்று அறிக்கையில் குறிப்பிட்டிருப்பதைக் கண்டு மகிழ்ச்சி அடைவது என்பது அரைக் கிணறு தாண்டிய அளவில்

ஏற்பட்ட மகிழ்ச்சிதான் என்பதை நான் சுட்டிக் காட்டாமல் இருக்க முடியவில்லை. நல்ல மொழியில் எழுதக்கூடிய நல்ல வல்லமை பெற்ற வல்லுனர், அறிஞர் டாக்டர் ஜெபர்ஸன் அவர்கள் இதைப்பற்றி வெகு அழகாக குறிப்பிட்டிருக்கிறார். ஒரு ஊரின் பெயரையோ அல்லது நாட்டின் பெயரையோ தலை நகரத்தின் பெயரையோ மாற்றுவது என்பது ஒரு லேபிளை எடுத்து விட்டு மற்றொரு லேபிளைப் போடுவது என்பது அல்ல என்று அவர் எழுதி இருக்கிறார். அதேபோன்று ஒரு நாட்டின் மக்களுடைய ஒரு நாட்டில் வாழ்கின்ற மக்களின் விருப்பப்படி மாற்றுவதற்கு அவருடைய பொன் மொழிகளை மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். ஆகவே தமிழ்நாடு சட்ட மன்றம் என்று மாற்றி எழுதிவிட்டால் மட்டும் மகிழ்ச்சி அடைந்து விட முடியாது என்பதை மட்டும் குறிப்பிட விரும்புகிறேன்.

இந்த அறிக்கையை வாசிக்கும்போது கனம் அமைச்சர் அவர்கள் மிகவும் பெருமையுடன் வாசித்தார். இந்த அறிக்கையில் எந்தவிதமான வரியும் இல்லை என்கிற நிலையில் பெருமையுடன் வாசித்தார். ஆனால் மத்திய அரசாங்கத்தாரால் விதிக்கப்பட்ட வரியைக் கண்டு தமிழ் நாட்டு மக்கள் எல்லோரும் அதைத் தாங்க முடியாமல் வேதனைப்படுகிறார்கள். அதைக் கண்டு இவர்கள் பெருமைப்படுவார்களா என்பதை மறந்து விடக்கூடாது. இங்கு வரி விதிக்கவில்லை என்ற பெருமையை இங்குள்ள மக்கள் அனுபவிக்க முடியாமல் மத்திய அரசாங்கத்தினுடைய வரிக் கொடுமை இவர்களை வாட்டிக்கொண்டிருக்கிறது. ஆகவே இங்கு வரி இல்லை என்ற பெருமையை இங்குள்ள அமைச்சர்கள் பூரணமாக அனுபவிக்க முடியாத நிலைமை ஏற்பட்டிருக்கிறது என்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். அதனால் அவர்கள் மத்திய அரசாங்கத்தினுடைய பிணைப்பிலிருந்து விடுவித்துக் கொண்டால் தான் இந்தப் பெருமையை அவர்களும் பூரணமாக அனுபவிக்க முடியும். அவர்களுக்காக நாமும் நிச்சயமாக அந்தப் பெருமையை பூரணமாக அனுபவிக்கக்கூடும். ஏனென்றால் அறிக்கையிலே உணவுப் பிரச்சனையைப்பற்றி கூறப்படுகிற நேரத்தில் அமைச்சர் அவர்கள் இந்த ஆண்டு உணவு உற்பத்தி மிகக் கணிசமான முன்னேற்றத்தை அடைந்திருக்கிறது என்றும், மூன்றாவது திட்ட காலத்திற்குள்ளாக 15 லட்சம் டன் அதிகப்படியான உணவு உற்பத்தி லட்சிய இலக்கை எதிர்பார்க்க முடியும் என்றும் தம் நம்பிக்கையைத் தெரிவித்து, அதே நேரத்தில் அந்தத் திட்ட லட்சிய அளவை எட்ட முடியாததற்குத் தடையாக இருப்பது ரசாயன உரம் என்றும் 1957-ம் ஆண்டு நமக்கு 1.2 லட்சம் டன்தான் கிடைத்தது, 1961-ம் 1.3 லட்சம் டன் அளவில் தான் கிடைக்கும் என்ற வருத்தமான செய்தியையும் அதோடு பாசன வசதி பெருகாவிட்டால் திட்ட லட்சிய அளவை அடைவது சிரமமாக இருக்கும் என்றும் தெரிவித்தார். உணவு தான்ய உற்பத்தியில் லட்சிய அளவை அடைவதற்குத் தடையாக இருப்பது பாசன வசதிக் குறைவு என்று சொல்லி தப்பிவிடுவதைக் காட்டிலும், எனக்கு முன் பேசிய ஒரு நண்பர் அவர்கள் தம்முடைய தொகுதி நீர்வளம், நிலவளம் நிரம்பப் பெற்றது என்று குறிப்

6th March 1961] [Sri M. Karunanithi]

பிட்டதோடு தமிழகம் எங்கிலும் அத்தகைய வளங்கள் எல்லாவற்றையும் பார்க்கலாம் என்று பெருமையோடு சொன்னர். ஆனல் குறிப்பாகவும், சிறப்பாகவும் நான் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிற குளித்தலை தொகுதியில் குடகநாறு திட்டத்தை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று இந்தச் சட்டமன்றத்தில் பலமுறையும் சொல்லி வந்திருக்கிறேன். ஏழாயிரத்து ஐம்பது ஏக்கராவுக்கு மேல் பாசன வசதி பெறக்கூடிய அந்தத் திட்டத்திற்கு 20 லட்சம் ரூபாய் செலவாகும் என்று மதிப்பிடப்பட்டு இது மூன்றுவது திட்டத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. அதுவும் (B) பி-வரிசையில் எட்டாவதாக இடம் பெற்றிருக்கிறது என்கிறபோது இது வெறும் கண்துடைப்பாகச் சேர்க்கப்பட்டிருக்கிறதே தவிர இத் திட்டம் நிறைவேற்றப்படுமா? அதற்குரிய செயல்களை இந்த அரசாங்கத்தார் எடுத்துக்கொள்வார்களா என்கிற ஐயப்பாடு எழுந்துகொண்டிருக்கிறது.

இப்படிப்பட்ட சிறிய சிறிய பாசனத் திட்டங்கள் எல்லாம்கூட 20 லட்சம், 10 லட்சம் என்று செலவாகக்கூடிய திட்டங்கள் எல்லாம்கூட நிறைவேற்றப்படாமல் இருப்பதற்குக் காரணம் நாம் கேட்ட பங்குத் தொகை, தமிழகத்திற்குரிய பங்குத் தொகை கொடுக்கப்படாததுதான். கேட்டதில்கூட நூறு கோடி ரூபாயைக் குறைத்துப் போய்விட்டுவா என்று புறக்கணிக்கப்படுகிருர்கள். ஆகையால்தான் கொடகனறு போன்ற சிறிய திட்டங்கள் எல்லாம்கூட நிறைவேற்றப்படாமல் கைவிடப்படுகின்றன. அதுவும் இவர்கள் தங்கள் சிப்பந்திகளுடைய சம்பளத்தை உயர்த்தியதனல் ஏற்பட்ட கஷ்டத்திற்கு உதவியாக அவர்கள் கொடுத்துவந்த தொகையைக்கூட இவ்வாண்டில் இருந்து இழக்கக்கூடிய பரிதாபகரமான நிலையில்—நாங்கள் கேட்டோம், கெஞ்சினேம்— மன்றுடினேம்—மண்டியிட்டும் பலனில்லை என்று கையை விரிக்க வேண்டிய நிலை எதனல் ஏற்படுகிறது என்பதை நிதி அமைச்சர் அவர்கள் யோசித்துப் பார்க்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். உணவு உற்பத்தியைப் பெருக்காவிட்டாலும் விலைவாசிகள் நாளுக்குநாள் உயர்ந்துகொண்டே போகின்றன? அதைக் கட்டுப்படுத்த இவர்கள் என்ன செய்திருக்கிருர்கள்? இலங்கை பாராளும் மனறத்தில் நிறைவேறிய ஒரு மசோதாவைக் குறிப்பிட விரும்புகிறேன். இன்றியமையாத பொருள்களின் விலையும், உணவுப் பொருள்களின் விலையும் அங்கே ஏறிக்கொண்டு போவதைத் தடுக்க, ஓர் அளவிற்குள் கட்டுப்படுத்துவதற்கு இலங்கைப் பாராளு மன்றம் ஒரு மசோதாவை நிறைவேற்றியிருக்கிறது. எந்த வணிகரானுலும் அவர்கள்மீது சட்டத்தை மீறிய குற்றத்திற்காக கடுமையாக நடவடிக்கை எடுத்துக்கொள்ள வகை செய்கிறது அந்த மசோதா. அதைப் பத்திரிகையில் பார்க்கிறேம். இந்த அரசு அத்தகைய ஒரு மசோதாவைக் கொண்டுவர முடியுமா? அப்படிப்பட்ட மசோதாவைக் கொண்டுவருவதற்குத் திராணியற்றது இது, வகையற்றது இது என்பதை நான் அறிவேன். மத்திய அரசினருக்கு எடுத்துச் சொல்லி விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவதற்கு ஏன் முயற்சி செய்யக்கூடாது என்று இந்த நேரத்தில் குறிப்பிட்டுக் கேட்க

[Sri M. Karunanithi] [6th March 1961

விரும்புகிறேன். இவ்வளவு பெரிய பேரரசில் எவ்வாறு அப்படிப்பட்டதொரு மசோதாவைக் கொண்டுவர முடியும் என்று கேட்கலாம். அதனாலேயே சொல்கிறேன். இவ்வளவு பெரிய பேரரசாக இருக்கத் தேவையில்லை. சிறிய நாடாக இருந்தாலும், இலங்கையைப் போன்று இருந்தாலும் போதும். தமிழகம் தனித்து இயங்கினால்தான், திராவிடநாடு தனி அரசாகத் திகழ்ந்தால்தான் இந்த நாட்டு தமிழ்ப் பெருங்குடி மக்களைக் காப்பாற்ற முடியும் என்பதைத் தெரிவிக்க விரும்புகிறேன்.

1952-ம் ஆண்டு இரண்டாம் ரக அரிசியின் விலை 7% ஆக உயர்ந்திருந்தது. 1960-ம் ஆண்டு அது 73% ஆக உயர்ந்திருப்பதை வருத்தத்தோடு தெரிவிக்கவேண்டும். அடுப்புக்கரி 25%, விறகு 38%, ஜவுளி 31% என்று இப்படி ஒவ்வொரு பொருளும் விலை உயர்ந்துகொண்டே போகிற நேரத்தில் அதைக் கட்டுப்படுத்தாமல் உணவு உற்பத்தி பெருகியிருக்கிறது என்பதானது குதிரை கொழுக்கிறது, ஆனால் அதற்கான கடிவாளம் இல்லை, மாடு கொழுத்து வருகிறது, அதற்கான மூக்கணாங் கயிறு இல்லை என்ற அளவில் விட்டுவைத்துக்கொண்டே போனால் நாடு சீரழியும். ஆகவே உடனடியாக விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவதற்கு மத்திய அரசிடத்தில் வற்புறுத்தவேண்டும் என்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

உணவு உற்பத்தியைப் பற்றி பிரமாதமாகப் பேசப்படுகிற **நேரத்தில்** தஞ்சை மாவட்டத்தில் புயலினாலும், பெரு மழையினாலும், பெரும் அளவுக்குப் பயிர்கள் பாதிக்கப்பட்டது என்று ஒரு அமைச்சர் வெளியிடவும், இன்னொரு அமைச்சர் பாதிக்கப்படவில்லை என்று வெளியிடவும், அறுவடையாகிற இந்தக் காலத்தில் நெல் மணிகளைப் பார்த்தால் எல்லாம் பதருகிப் போயிருக்கிறது என்கிற நிலைமை தெரிவித்துவிட்ட பிறகும் அந்த நிலங்களுக்கு வரி விலக்குச் செய்யவேண்டுமென்ற நல்லெண்ணம் இந்த அரசுக்கு வரவில்லை என்பதை இந்த நிதிநிலை அறிக்கையின்மீது நடைபெறுகிற விவாதத்தில் வருத்தத்தோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

சேதுசமுத்திரத் திட்டத்தில் தூத்துக்குடித் துறைமுக விஸ்தரிப்புத் திட்டம் அடங்கியுள்ளது என்று மூன்றாவது திட்ட வரைவு பக்கம் 97-ல் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால் தூத்துக்குடித் துறைமுக அபிவிருத்தியுடன் இணைந்திருப்பது சேது சமுத்திரத் திட்டம் என்று நிதி நிலை அறிக்கை கூறுகிறது. அதோடு தூத்துக்குடித் துறைமுகத்தை அபிவிருத்தி செய்யும் திட்டத்தை மூன்றாவது திட்டத்தில் வலியுறுத்துவதாக சொல்லப்படுகிறது. தூத்துக்குடி இல்லை, சேதுசமுத்திரமும் இல்லை என்று நிலைமை இப்படிப் போனால் இவைகளைப் பற்றிக் கேட்கிறபோது வடக்கு, தெற்கு பேசுகிறார்கள், இப்படியெல்லாம் பேசுவது சரியல்ல என்கிறார்கள். "நாட்டுப் பிரிவினை தானே உங்களுக்குத் தெரியும்" என்று ஸ்ரீ கக்கன் சொல்கிறார். திரு. அண்ணா அவர்களும், மற்றவர்களும் பேசுகின்ற சர்வ கட்சிக் கூட்டங்களில் நிதி அமைச்சர் அவர்களும் கலந்துகொண்டிருக்கிறார்கள். அங்கே

6th March 1961] [Sri M. Karunanithi]

பேசப்படுகிற விஷயங்களை அவர்கள் தெரிந்துகொண்டதில்லையா? ஜனநாயகத்தை வலியுறுத்திப் பேசுகின்றபோது, ஜனநாயகம் என்ன என்று உங்களுக்குத் தெரியுமா என்று கேட்பதும், இது அறியாமை என்று சொலவதும், உங்கள் கட்சியின் நிலைமைதான் சந்தி சிரிக்கிறதே என்று எடுத்துக் காட்டுவதும்—யார் கட்சி சந்தி சிரிக்கிறது என்பது மக்களுக்குத் தெரியாதா—எங்களைச் சந்தி சிரிக்கச் செய்யாது. நேற்று ஆந்திராவில் இருந்து டெல்லிக்குப் போய் அவர்கள் கட்சி சந்தி சிரிக்கிறது. மைசூர் விஷயம் சந்தி சிரிக்கிறது, அதிகாரிகளை அழைத்துக்கொண்டு போய் அமைச்சர்கள் தேர்தல் நிதி வசூலிப்பது சந்தி சிரிக்கிறது—இவற்றை எல்லாம் உணர்ந்து பார்க்கவேண்டும்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : Sir, on a point of order. The hon. Member can speak only about the Budget and this House is not a party platform to conduct any propaganda. I am not able to understand the hon. Member referring to 'Santhi siruppu' and I want a ruling from the Chair whether it is parliamentary.

TEMPORARY CHAIRMAN (SRI S. M. ANNAMALAI): That is not a point of order.

AN HON. MEMBER : It is not a point of order.

SRIMATHI T. N. ANANDANAYAKI : Only the Chair can say that and not the hon. Member.

SRI M. KARUNANITHI : பட்ஜெட் உரையில் என்ன பேச வேண்டுமென்பதை நான் அறிவேன். அம்மையாருக்கு அது தெரியாததை நினைந்து அமைச்சர் பாஷையில் அவர்களது அறியாமையைக் கண்டு வருந்துகிறேன்.

SRI A. GOVINDASAMY : தலைவர் அவர்களே, அம்மையார் குறிப்பிடும்போது 'பாயின்ட் ஆப் ஆர்டர்' இல்லை என்று குறிப்பிட உங்களுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது என்று சொன்னார்கள். அது சபை நடவடிக்கையில் ரெக்கார்டு ஆகியிருக்குமானால் அதை 'எக்ஸ்பஞ்சு' பண்ணவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : Sir, I never meant the Chair. One hon. Member has stated that it is not a point of order and I have stated that only the Chair can say that and not that hon. Member.

TEMPORARY CHAIRMAN (SRI S. M. ANNMALAI): அங்கத்தினர் ஒருவரைப் பற்றி அப்படிக் குறிப்பிட்டார்களே தவிர, தலைவரைப் பற்றி அப்படிக் குறிப்பிடவில்லை. அடுத்தபடியாக லட்சுமிகாந்தம்மாள் பேசுவார்கள்.

* SRIMATHI P. K. R. LAKSHMIKANTHAM : கனம் தலைவர் அவர்களே, என்னுடைய நேரத்தில் 2 நிமிஷங்கள் வீணாகப் போய் விட்டது. அதற்காக இன்னும் 2 நிமிஷம் முடிவில் எனக்குச் சேர்த்துத் தரவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொள்கிறேன்.

*1960-61-ம்* ஆண்டு நிதி நிலை அறிக்கையை நான் மனதாரப் பாராட்டி ஒரு சில வார்த்தைகளைப் பேச விரும்புகிறேன். இந்த பட்ஜெட் உரையில் ஒன்றும் இல்லை என்று சொல்பவர்கள் சிலர்.

[Srimathi P. K. R. Lakshmikantham] [6th March 1961

இந்த பட்ஜெட் உரையானது தேர்தலுக்காகத்தான் உரைக்கப் பட்ட உரை என்று சொல்பவர்கள் சிலர். இப்படி ஏதாவது இதில் ஒரு சில குற்றங்களையாவது சொல்லவேண்டும் என்பதற்காகத் தான் இப்படிச் சொல்கிறார்கள் என்றுதான் நான் கருதுகிறேன். ஆனால் உண்மையிலேயே எல்லா விஷயங்களும் அடங்கியுள்ள பாராட்டத்தக்க பட்ஜெட் இது என்று சொன்னால் மிகையாகாது என்று கூறி இதற்காக நமது நிதி அமைச்சர் அவர்களுக்கும் மகிழ்ச்சியோடு பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறேன். கட்சி நிதி திரட்டுகிறார்கள் மந்திரிகள் என்று எதிர்க்கட்சியில் பலர் சாதாரணமாக கூறுகிறார் கள். கட்சி அடிப்படையில்தான் அரசாங்கம் நடைபெறுகிறது என்பதை அவர்கள் மறந்துவிட்டார்கள் போல் இருக்கிறது. பார்லிமென்டின் ஜனநாயக முறை என்றால் கட்சி அடிப்படையிலேதான் அரசாங்கம் நடைபெறும். காங்கிரஸ் கட்சி மாத்திரம் நிதி திரட்டவில்லை. எல்லாக் கட்சிகளும் நிதி திரட்டு கிறார்கள். இதை எல்லாம் அவர்கள் மறந்துவிட்டு காங்கிரஸ் மந்திரிகள் நிதி திரட்டுகிறார்கள் என்று சொல்லுவது மாமியார் உடைத்தால் மண்குடம், மருமகள் உடைத்தால் பொன்குடம் என்பதுபோல் இந்தச் சபையில் நமது மதிப்பிற்குரிய திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்கள் மாமியாராக ஆக்ட் பண்ணு வது குறித்து ஒரு புறம் வருத்தமும், ஒரு புறம் மகிழ்ச்சியும் அடைகிறேன். அந்தக் கட்சியைச் சேர்ந்தவர்கள் ஒவ்வொரு சொல்லுக்கும் நிதி திரட்டுகிறார்கள் என்பதை மறந்துவிட்டார் கள் போல் இருக்கிறது. எந்த கட்சியும் நிதி திரட்டுவதில் தவறு இல்லை என்பதை இந்த மன்றத்தில் கனம் சபாநாயகர் மூலமாக தெரிவித்துக்கொள்கிறேன். மந்திரிகள் என்றால் 24 மணி நேரமும் மந்திரிகள் ஆகவே இருப்பார்கள் என்று சொல்லமுடியாது. தனிப்பட்ட மாணிக்கவேலராகவும், தனிப்பட்ட சுப்பிரமணிய மாகவும் இருக்கலாம். கட்சியின் அடிப்படையில் வந்தவர்கள் கட்சிக்கு நிதி திரட்டுவதிலே எந்தவிதமான குற்றமும் இல்லை.

இது நிற்க. இப்போது நமது வரவு செலவுத் திட்டத்திலே எல்லோரும் ஒரு பிரச்னையை ஏகமனதாக வரவேற்றிருக்கிறார் கள். அதாவது 11-வது வகுப்பு வரையிலும் இலவசமாக ஜாதி மத வித்தியாசமின்றி படிப்பு சொல்லிக் கொடுப்பதைப்பற்றி எல்லோரும் தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்திருக்கிறார்கள். இது போல் நானும் என்னுடைய மகிழ்ச்சியைத் தெரிவித்துக்கொள்வ தோடு இது சம்பந்தமாக ஒரு திருத்தம் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். மாதம் 100 ரூபாய் வருவாய் உள்ளவர் களுக்குத்தான் இந்தச் சலுகை கொடுக்கப்பட்டுவருகிறது. ஆனால் இப்பொழுது 100 ரூபாய் என்று சொல்லுவது மிகவும் குறைந்த அளவாகும். ஏனென்றால் நம்முடைய தேசிய வருமானம் அதி கரித்திருக்கிறபடியினால் சாதாரணமாக ஒரு தொழிலாளரும் கூட 100 ரூபாய் பெருகின்ற தருணம் இருப்பதனால் 100 ரூபாய் என்பது 200 அல்லது 150 ரூபாயாக இருக்கவேண்டுமென்று சொல்ல விரும்புகிறேன். அதிகமான ஜனங்கள் 100 ரூபாய் பெறக்

6th March 1961] [Srimathi P. K. R. Lakshmikantham]

கூடிய சக்தியைப் பெற்றிருக்கிறார்கள். இதன் காரணமாக தேசிய வருமானம் உயர்ந்திருக்கிறது என்பதை நன்றாக அறிகிறோம். இருந்தாலும் எதிர்க்கட்சியினர் தேசிய வருமானம் உயரவில்லை என்று சொல்லுகிறார்கள். தேசிய வருமானம் உயர்ந்து தான் இருக்கிறது. இருந்தாலும்கூட விலைவாசி கட்டுப்படுத்தப் படவேண்டும். விலைவாசி உயர்வுக்கு தகுந்தாற்போல் தேசிய வருமானம் உயர்ந்திருந்தாலும் இனனும மேலும் மேலும் விலைவாசி உயர்ந்துபோனாலும் நம்முடைய திட்ட செலவுகளும் அதிகமாகும், மேலும் நம்முடைய நாட்டிலே இருக்கும் மக்கள் தொகை அதிகரித்துக்கொண்டிருக்கிற காரணத்தினால் இப்போது விலை உயர்வை கட்டுப்படுத்தாவிட்டால் இதனால் பல கஷ்டங்கள் ஏற்படும். இந்தக் கஷ்டத்தை அனுபவிப்பவர்கள் நடுத்தர வகுப்பினரும், ஒரு குறிப்பிட்ட நிர்ணயிக்கப்பட்ட சம்பளத்தை வாங்கும் மக்களும்தான். ஆதலால் இந்த விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

நெசவாளர்களுக்கு நூல் கிடைப்பதில் அடிக்கடி நெருக்கடியான நிலைமை ஏற்பட்டுக்கொண்டிருக்கிறது. மதுரை ஜில்லாவானது நெசவாளர்கள் நிறைந்த ஒரு பகுதி. குறிப்பாக மதுரை நகரத்தில் நெசவாளர்களுக்கு நியாயமான விலையில் நூல் கிடைப்பதற்கு நல்ல சந்தர்ப்பத்தை ஏற்படுத்தித் தரவேண்டும். நியாயமான விலையில் நூல் கிடைக்க ஏற்பாடு செய்யாவிட்டால் நடைமுறையில் இந்த விலையில் நூல் கிடைப்பது அரிதாக இருக்கிறது. 20-ம் நம்பர் நூல் தேவையாக இருந்தால் 60-ம் நம்பர், 80-ம் நம்பர் நூலை வாங்கினால்தான் 20-ம் நம்பர் நூல் தரக்கூடிய நிலை சில இடங்களில் இருந்துவருகிறது. ஆகையால் அங்கே டிப்போ வைத்து அதன் மூலமாக நியாயமான விலையில் நெசவாளர்களுக்கு நூல் கிடைக்க வழிவகை செய்யவேண்டுமென்று இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்ல விரும்புகிறேன்.

தனியார் துறை, பொதுத் துறை என்ற இரு துறைகளுக்கும் ஆதரவு தருவது சர்க்காருடைய கொள்கைதான். ஆகையால் கூட்டுறவு சங்கத்திலே சேர்ந்த நெசவாளர்களுக்கு சர்க்கார் கொடுக்கும் பல சலுகைகளை மற்றவர்களும் அடையச் செய்ய வேண்டும். வீடு கட்டும் திட்டங்கள் போன்றவை சம்பந்தமாக கூட்டுறவிலே சேர்ந்து இருக்கும் நெசவாளர்களுக்கு சலுகை அளிப்பதுபோல் கூட்டுறவிலே சேராத நெசவாளர்களுக்கும் சலுகை அளிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இன்னொரு முக்கியமான விஷயத்தை இந்தச் சபையில் சொல்ல விரும்புகிறேன். மதுரையில் நெல்பேட்டை கமிஷன் மண்டி என்று ஒன்று இருக்கிறது. அங்கு கமிஷன் வாங்கிக்கொண்டு நெல் விற்றுவருகிறார்கள். விவசாயிகள் தாங்கள் கொண்டுவரும் நெல்லை அங்கு கொண்டுபோய் கமிஷன் கொடுத்து விற்றுக் கொண்டிருக்கிறார்கள். விலை குறைந்துவிடுமானால் அந்த நெல்லை அங்கேயே வைத்துவிட்டு போய், இரண்டு நாள் கழித்து வந்து இந்த நெல்லை விற்று பணம் கொண்டுபோகிறார்கள். அங்கேயே இருப்பவர்கள் வியாபாரிகள் அல்ல. ஒரு

மூட்டைக்கு 4 அணா, 4-½ அணா கமிஷன் பெற்றுக்கொண்டு அதை விற்றுக் கொடுக்கிறார்கள். அவர்களும் வியாபாரிகள் என்று கருதி அங்கே விற்கப்படும் நெல்லுக்கு விற்பனை வரி விதிக்கிறார்கள். இம்மாதிரியாக மற்ற ஜில்லாக்களில் இல்லை என்று நினைக்கிறேன். மதுரையில் மாத்திரம்தான் இருக்கிறது. ஆகையால் அப்படி விற்கப்படும் நெல்லுக்கு விற்பனை வரி இல்லாமல் செய்ய வேண்டுமென்று மிகத் தாழ்மையுடன் கனம் நிதி அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

மருத்துவக் கல்லூரியில் படிக்கும் மாணவர்கள் அரசாங்க உதவி பெற்றும் படிக்கிறார்கள். தங்களுடைய செலவிலும் படிக்கிறார்கள். ஆனால் நான்கு, ஐந்து வருஷங்கள் படித்தபிறகு ஹவுஸ் சர்ஜனாக ஆஸ்பத்திரியில் அவர்கள் அப்பியாசப் பயிற்சி பெறுகிறார்கள். அப்போது அவர்களுக்கு எந்தவிதமான சம்பளமும் கொடுப்பதில்லை. ஒரு சிலருக்கு மாத்திரம் 90 அல்லது 100 ரூபாய் மாதம் கொடுப்பதாகக் கேள்விப்படுகிறேன். ஹவுஸ் சர்ஜனாகப் பணியாற்றும் எல்லோருக்கும் மாதம் ஒன்றுக்கு 100 ரூபாய் சம்பளம் என்றோ வேறு எந்த பெயரிலோ கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அவர்கள் 4, 5 வருஷங்கள் செலவு செய்து படித்துவிட்ட காரணத்தால் மேலும் செலவு செய்வது என்பது கஷ்டமாக இருக்கும் என்று உத்தேசித்து ஹவுஸ் சர்ஜனாக பணியாற்ற ஒரு வருஷ காலத்திற்கு மாதம் ஒன்றுக்கு 100 ரூபாய் கொடுத்து உதவி செய்தால் நலமாக இருக்குமென்று தெரிவித்துக்கொள்கிறேன்.

சமுதாய நலத் திட்டம் போன்ற பல திட்டங்கள் மூலமாக நமது கிராமத்தில் இருக்கும் பெண்களுக்கு எத்தனையோ நன்மைகள் செய்கிறோம். ஆனால் நகரத்தில் இருக்கும் ஏழை பெண்களுக்கு எந்தவிதமான உதவி செய்வதற்கும் நம்மிடத்தில் திட்டமில்லை, முடிவதில்லை. ஆகையால் நகரத்தில் இருக்கும் மிக ஏழை பெண்களுக்கு பால்மாடு வாங்கிக்கொள்வதற்கு மான்யமாக பணம் கொடுக்கவேண்டும். அவர்கள் தையல் மெஷின் வாங்கவும் உதவி செய்யவேண்டும். கிராமத்தில் ஏழை பெண்கள் இருக்கிறார்கள். இம்மாதிரி நகரத்திலும் ஏழை பெண்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கும் உதவி செய்வது அரசாங்கத்தினுடைய கடமை என்று தெரிவித்துக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

11 a.m.

* SRI R. KRISHNASAMI NAIDU : தலைவர் அவர்களே, நிதியமைச்சர் அவர்கள் சமர்ப்பித்திருக்கும் இந்த ஆண்டு வரவு செலவுத் திட்டத்தை நான் மனமார வரவேற்கிறேன். ஐந்தாண்டுத் திட்டங்களின் மதிப்பு உயர்ந்துகொண்டு போவதுபோல் வரவுசெலவு அறிக்கையின் பக்கங்களும் வளர்ந்து கொண்டே போகிறது, என்று எடுத்துக்காட்டப்பட்டது. அதன் அவசியம் ஏற்பட்டிருக்கிறது என்பதை நாம் உணர வேண்டும். முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களின் சாதனைகளையும், நாம் சாதித்துள்ளவை எவ்வாறு இருக்கிறது என்பதையும் இச்சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு தொகுத்துக் கூறி

அடுத்த வருடத்திய வரவுசெலவு திட்டத்தை இதோடு ஒப்பிட்டு பார்க்கும்படியான சந்தர்ப்பத்தை அளிப்பதுதான் வரவுசெலவுத் திட்டத்தின் பூர்ண அமைப்பு என்று கூறினால் அது மிகையாகாது. இன்னும் விரிவாக இந்த அறிக்கை இருப்பது மேலும் பொருத்தமாகயிருக்கும். சட்டமன்ற உறுப்பினர்கள் மட்டும் தெரிந்துகொள்வதற்காக அல்லாது இம்மாநிலத்திலுள்ள சாதாரண மக்களும் நமது ராஜ்யத்தில் என்ன நடக்கிறது என்பதை இந்த சந்தர்ப்பத்தைக் கருதியேனும் பத்திரிகைகளில் விரிவாக வரும் செய்திகளைத் தெரிந்துகொண்டு நிலைமையை அவர்கள் உணர்ந்துகொள்ளும் வாய்ப்பினை இந்த அறிக்கையில் கொடுக்கப்பட்டுள்ள விவரங்கள் தருகின்றன. இந்த அறிக்கை நல்ல முறையில் தயாரிக்கப்பட்டிருக்கிறதென்பதினால் இதை நான் ஆதரிக்கிறேன். அரைக்கிணறு தாண்டுகிற மாதிரி தமிழ்நாடு என்று பெயரிடப்பட்ட விஷயம் அம்மாதிரி இருக்கிறதென்றும் அன்பர்கள் குறிப்பிட்டார்கள். அரைக்கிணறு தாண்டுகிறவன் நீந்தத் தெரியாதவனாகயிருந்தால் அவன் இறந்து போயிருக்க வேண்டும். அப்பொழுது அவனால் அரைகுறை மகிழ்ச்சியடைய முடியாது, கிணற்றில் தண்ணீர் இல்லாதிருந்தால் அவன் கை அல்லது கால் முறிந்து போயிருக்கும். ஆக அரைகுறை மகிழ்ச்சி என்று சொல்லும் உதாரணம் பொருத்தமல்ல. எந்தக் காரியத்தை எடுத்துக்கொண்டாலும், நாம் நினைத்த அளவு காரியங்கள் கைகூடி மகிழ்ச்சி—தரத்தக்க அளவில் அவை நமக்கு பலனளித்துக்கொண்டிருக்கின்றன என்பதில் சந்தேகமில்லை. கிராமங்களுக்கு சென்று பார்த்தால் தெரியும், நமது ஐந்தாண்டுத் திட்டச் சாதனைகள் எப்படியிருக்கிறதென்பது. நியாயபுத்தியுள்ள ஒவ்வொருவரும் அங்கு நமது சாதனைகளை சரிவர புரிந்துகொள்ள முடியும். ஆகவே, அது பற்றிய விவாதத்தை அதிகப்படுத்த வேண்டாமென்று கருதுகிறேன்.

விலைவாசி உயர்வுபற்றி சொல்லப்படுகிறது, உண்மை. அதை மறுப்பதில்லை. அதைத் தடுப்பதற்கு என்ன மார்க்கங்கள் உள்ளன என்பதை சற்று யோசித்துப் பார்த்தால் என் அறிவிற்கு போதிய யோசனைகள் எனக்குக் கிடைக்கவில்லை. அதற்கு என்னுடைய் அறிவுக் குறைவு அல்லது திறமைக் குறைவு காரணமாகயிருந்து இருக்கலாம். இதுபற்றி சிந்தனை பலர் மனதிலும் குடி கொண்டிருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. எந்தப் பகுதியில் உணவு உற்பத்தி செய்யப்படுகிறதோ, விவசாயிகள் அல்லது விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிற தொழிலாளர்கள் எங்கு வசிக்கிறார்களோ அந்தக் கிராமங்களுக்குச் சென்று விவசாயத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறவர்கள், விவசாயத் தொழிலாளர்கள், நிலச் சொந்தக்காரர்கள் இவர்கள் இந்த விலைவாசி உயர்வால் பாதிக்கப்பட்டிருக்கிறார்களா, அதனால் அவர்கள் வருத்தப்படுகிறார்களா அல்லது இந்த உயர்வை அவர்கள் ஆதரிக்கிறார்களா என்று அந்தப் பகுதிக்குப் போய் அவர்கள் உள்ளங்களைத் தொட்டுப்பார்க்க வேண்டுமென்று அங்கத்தினர்களை

[Sri R. Krishnasami Naidu] [6th March 1961

கேட்டுக் கொள்கிறேன். கிராமப் பகுதிகளில் இந்த விலைவாசி சம்மந்தமான கருத்துக்கள் வேறுபட்டதாயிருக்கிறது, நம் கருத்துக்கு மாறுபட்டதாகயிருக்கிறது. நான் என் சொந்த கிராமத்திற்கு ஒரு வாரத்திற்கு முன்னர் சென்றிருந்தேன். அங்குள்ளவர்களுக்கு முழுநேர வேலையிருக்கிறது. 14 வயது பெண்கள்கூட ஆறு மணியிலிருந்து எட்டு மணிவரை 5 அணாவிற்கு களை எடுக்கிறார்கள், சாப்பிடாமலேயே வேலை செய்கிறார்கள். 9 மணிக்கு களை வெட்டச் சொல்கிறார்கள். அதற்கு 12 அணா. இப்படியாக ஏழை எளிய மக்கள், ஒரு குடும்பத்தில் மூன்று நான்கு பேர்கள் இருந்தால் அக்குடும்பத்திற்கு நாள் ஒன்றுக்கு 5 முதல் 7 ரூபாய் வரை வருமானம் கிடைக்கிறது. வருடத்தில் 220 நாட்களுக்கு அவர்களுக்கு இவ்வருமானம் வருகிறது என்பதைக் கேட்டு நான் மிகமிக சந்தோஷப்பட்டேன். ஆக, விலைவாசி உயர்வு ஒரு பக்கம் இருந்தாலும், கிராமங்களி லுள்ள மக்களுக்கு வேலை வாய்ப்பு கிடைத்து வருமானமும் அதிக மாக கிடைத்து, விவசாயத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்கள் சுபிட்சமாக பல பொருள்களை வாங்கி தங்கள் வாழ்க்கையை நடத்தி வருகிறார்கள். அவர்களது வாழ்க்கைத் தரமும் உயர்ந் திருக்கிறதென்பதை அங்கு சென்று பார்த்தால் தெரியும். இப்படி பல உதாரணங்கள் கொடுத்துக்கொண்டே போகலாம்.

இந்த சந்தர்ப்பத்தில் நான் ஒரு சில யோசனைகள் கூற விரும்பு கிறேன். உணவு உற்பத்தி சம்பந்தமாக, உரத் தட்டுப்பாடு இருக் கிறது. ரசாயன உரம் போதுமானதாகயில்லை. உற்பத்திக் கான ஏற்பாடுகள் வேகமாக நடைபெற்றுக்கொண்டிருக் கின்றன. அது நம்பிக்கையளிப்பதாகயிருக்கிறது. ஆனால் ரசாயன உரம் சம்பந்தமாக ஒவ்வொரு ஜில்லாவிலும் எந்தெந்த பருவகாலத்தில் எந்தெந்த ஜில்லாக்களுக்கு எவ்வளவு எவ்வளவு போய் சேரவேண்டுமோ அவ்வாறு பகிர்ந்தளிப்பதில் ஏதோ கோளாறு இருப்பதாகத் தெரிகிறது. ஒவ்வொரு ஆண்டிலும் நாம் நினைந்த காலத்தில் உரம் வராததால் பருவக் காலத்தில் அந்தந்த ஜில்லாக்களுக்கு வேண்டிய உரம் போய்ச் சேருவதற்கு வேண்டிய ஏற்பாடு செய்ய முடியவில்லை என்றிருந்தாலும் முற்றிலும் அக்காரணத்தை ஒப்புக்கொள்ள முடியாத நிலைதான் இருக்கிறது. ஆக, உரம் நன்கு பகிர்ந்தளிக்க வேண்டிய விஷயத்தில் சிறந்த முறைகள் கையாளப்படவேண்டியது அவசியம்.

பின்னர், பருத்தி நம் நாட்டில் 41 கோடி ரூபாய் அளவிற்கு இறக்குமதி செய்யப்படுகிறதென்று, இவ்வறிக்கையில் காணப்படுகிறது. இந்த ராஜ்யத்திலேயே நீண்ட இழை பருத்தி அதிகமாக உற்பத்தி செய்யக் கூடிய இடம் என் தொகுதிதான். ராஜ்யம் முழுமைக்கும் மெட்றாஸ் உகண்டா நம்பர் 2 விதையை அளிப்பது ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ள உகண்டா பருத்தி உற்பத்தியாளர் கூட்டுறவு மார்க்கட்டிங் சொஸைட்டி தயாரிப்பதுதான். அத்தாலுகாவில் கிட்டத்தட்ட 25,000

6th March 1961] [Sri R. Krishnasami Naidu]

ஏக்கர் இந்த நீண்ட இழைப் பருத்தி சாகுபடி செய்யப்படுகிறது. ஒவ்வொரு ஆண்டும் இதற்கு எங்கிருந்தோ வியாதி, பூச்சி வந்துவிடுகிறது. நமது விவசாய இலாகாவைச் சேர்ந்த நிபுணர்கள் இதற்கான ஏற்பாடுகள் செய்து வருகிறார்கள், ஆனால் அது பலனளிக்கவில்லை. ஒவ்வொரு ஆண்டும் குறைந்தது 10,000 பேல் பஞ்சு கிடைப்பது இந்த நோயால் பாதிக்கப்படுகிறது. 10,000 பேல் என்றால் 5,000 கண்டி. அதன் இப்போதைய விலையை எடுத்துக் கொண்டால் 60 லட்சமாகும். இவ்வளவு அதிகமான நஷ்டம். ஒரு தாலுகாவில் மட்டும் இவ்வியாதியால் உண்டாகிறது. இதற்காக சென்ரல் காட்டன் கமிட்டி மற்ற ராஜ்யங்களில் பூச்சி தடுப்பிற்கு ஏற்பாடுகள் செய்ய நிரந்தர ஆராய்ச்சி நிலையங்கள், அதற்கு வேண்டிய நிபுணர்கள் இவைகளை ஏற்படுத்துவதற்கான திட்டங்கள் உருவாக்கும் முயற்சிகள் காணப்படுகின்றன. ஆனால் நம் ராஜ்யத்திற்கு சென்ட்ரல் காட்டன் கமிட்டி ஒரு திட்டமும் உருவாக்கவில்லையென்று தெரிந்து, இப்பொழுது ஒரு திட்டம் நமது விவசாய இலாகா மூலம் அனுப்பப்பட்டிருக்கிறது. அரசாங்கம் இந்த விஷயத்தில் தீவிர கவனம் செலுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதாவது நீண்ட இழைப் பருத்தி உற்பத்தி செய்யும் பகுதிகளில், அவைகளுக்கு பூச்சி நோய்களால் ஏற்படும் ஆபத்துக்களை தவிர்க்க ஒரு நிரந்தர ஏற்பாட்டினை செய்ய அரசாங்கம் தீவிர கவனம் செலுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, எங்கள் தொகுதியில் ஒரு சர்க்கரை ஆலை நிறுவ விண்ணப்பம் அனுப்பப்பட்டிருக்கிறது. சர்க்கரை ஆலை நன்கு செயல்படத்தக்க சூழ்நிலை அங்கிருக்கிறது. அதற்கு இவ்வரசாங்கம் மத்திய அரசாங்கத்திற்கு சிபார்சு செய்து அதற்கான அனுமதி பெறவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

நீர்ப்பாசனம் சம்பந்தப்பட்ட மட்டில், என் தாலுகாவில் பிளவைக்கல் அணை, கோவில் அணை என்று இரண்டு இருக்கின்றன. 20,000 ஏக்கர்களுக்கு, இரண்டு போக சாகுபடி செய்ய அவை வாய்ப்பளிக்கும் திட்டம். மழைக்காலங்களில் அதிகமாக ஆற்றில் போகும் தண்ணீரைத் தடுத்து நிறுத்தி அதை பாசன வசதிக்கு உபயோகித்துக் கொள்ள வேண்டியது செய்யவேண்டும்.

பின்னர், பஞ்சாயத்து யூனியன்கள் சம்பந்தப்பட்ட சட்டம், சமீபத்தில் செய்யப்பட்ட சட்டம் அமுலுக்கு கொண்டுவரப்பட்டிருக்கிறது. பலயிடங்களில் பரவலாக மக்களுக்கு ஆட்சிப் பொறுப்பை பகிர்ந்தளிக்கும் வகையில் நல்ல திட்டமாக அமைந்திருக்கிறது. இவைகள் சரிவர செயல் படுவதற்கு உத்தியோகத்துறையில் உள்ள எல்லா அலுவலர்களும் சிரத்தையாகவும், மனப்பூர்வமாகவும் இதற்கான காரியங்களை செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது. உண்மையைக் கூற தயங்கவில்லை. இப்பொழுது இருக்கக் கூடிய பஞ்சாயத்துக்கள், பஞ்சாயத்து யூனியன்கள் இவைகளில் உத்தியோகப் பற்றற்றவர்களாக பணி புரியக்கூடியவர்களுக்கு இன்னும் புதிய

பொறுப்புகளையும் கடமைகளையும் ஏற்று நிர்வகிக்கத் தக்க அளவிற்கு அடிக்கடி அவர்களுக்கு இது விஷயமாக பயிற்சிகள் அளிக்கக் கூடிய ஏற்பாட்டை அரசாங்கம் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். தொடர்ந்து அதைச் செய்து கொண்டு வர வேண்டும். புதுப்பணிகளை, கடமைகளை ஏற்றுச் செய்வதற்கு வேண்டிய பயிற்சி கொடுத்து அவர்கள் விரிவான அனுபவம் பெறுவதற்கு என்னென்ன செய்யப்பட வேண்டுமோ அவைகளைச் செய்ய வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதிகாரங்கள் பகிர்ந்தளிக்கப்படும் வகையில் சில விதிகள் செய்யப்பட்டிருக்கின்றன. சட்டத்தின் நோக்கம் பாதிக்கப்படாத வகையில், எந்த நோக்கத்தோடு இச்சட்டம் கொண்டுவரப்பட்டதோ வதற்கு என்னென்ன செய்யப்பட வேண்டுமோ அவைகளைச் வேண்டும், இதில் வேண்டிய கவனம் செலுத்தப்படவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

**SRI K. SATTANATHA KARAYALAR** : கனம் அவைத் தலைவர் அவர்களே, இந்த ஆண்டு அதாவது 1961-62-ம் ஆண்டு வரவு செலவுத் திட்டத்தின் மீது ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். இந்த அறிக்கையில் வரவு ரூ. 87 கோடி 52 லட்சமாகவும், செலவு ரூ. 90 கோடி 30 லட்சமாகவும் மதிப்பிட்டு ஒரு அறிக்கை இந்த சபை முன் உள்ளது. இந்த பட்ஜெட்டைப்பற்றி பல நண்பர்கள் பேசும்போது, எதிர்க்கட்சியிலுள்ளவர்கள் இதை ஒரு தேர்தல் பட்ஜெட் என்று குறிப்பிட்டதை ஆட்சேபித்து பேசினார்கள். இதை ஒரு காபந்து சர்க்காருடைய பட்ஜெட் என்று விமர்சனம் செய்தால் கூட அதில் எந்தவிதமான தவறும் இருப்பதற்கில்லை என்று தான் நான் கருதுகிறேன். சர்க்காரிலிருந்து வெளியிடப்பட்டிருக்கும் 'எக்னமிக்ஸ் கிளாஸிபிக்கேஷன்' என்ற புத்தகத்தில் சில நல்ல புள்ளிவிவரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அது இந்த பட்ஜெட்டின், நிதிநிலை அறிக்கையின் விவரங்களுக்கு உதவி செய்வதாக இருக்கிறது. இதில் வரும் ஆண்டில் அதாவது 1961-62-க்கு பொதுவாக வருவாய் இனத்திலும் செலவு இனத்திலும் பல விவரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. எக்ஸ்பெண்டிச்சர் இனத்தில் 'கன்ஸம்ஷன் எக்ஸ்பெனடிச்சர்' என்கிற இனத்தில் கழிந்த ஆண்டு ரூ. 46 கோடி 25 லட்சம் இருந்தது இந்த ஆண்டு ரூ. 49 கோடி 90 லட்சமாக உயர்த்தப்பட்டிருக்கிறது. அடுத்ததாக 'டிரான்ஸ்பர் பேமென்ட்ஸ்' என்கிற இனத்தில் மான்யமாகவும் வட்டியாகவும் கழிந்த ஆண்டில் ரூ. 29 கோடி 2 லட்சமாக இருந்தது இந்த ஆண்டு ரூ. 31 கோடி 29 லட்சம் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. அதே நேரத்தில் ரெவின்யூ இனத்தில் மத்திய சர்க்காரிடமிருந்து வரவேண்டியது என்று குறிப்பிட்டிருக்கிற இனத்தில் கழிந்த ஆண்டு ரூ. 14 கோடி 22 லட்சம் என்று குறிப்பிட்டிருந்தது, இந்த ஆண்டு ரூ. 11 கோடி 44 லட்சமாக குறைந்து காணப்படுகிறது. இந்த இனத்தில் சுமார் 2 கோடி 78 லட்சம் ரூபாய் குறைவாகத்தான் நமக்கு கிடைக்கும். ஆகவே செலவு இனத்தில் அதிகப்படுகின்ற 3 கோடி 65 லட்சம் ரூபாயும்,

6th March 1961] [Sri K. Sattanatha Karayalar]

இதில் குறைவாக கிடைக்கின்ற 2 கோடி 78 லட்சம் ரூபாயும், ஏற்கனவே நமக்கு துண்டு விழக்கூடிய இரண்டு கோடி ரூபாயும் சேர்த்து சுமார் எட்டு அல்லது ஒன்பது கோடி ரூபாய்க்கு நாம் வழிவகை செய்தாக வேண்டும். இதை எப்படியோ சமாளிக்கிற முறையில் 'மஜிஸ்ஷியன்' போல வரி ஒன்றும் விதிக்காமல் சரிக்கட்டி இந்த அறிக்கையை தயாரித்திருக்கிறார்கள். வரிகள் ஒன்றும் இந்த ஆண்டு விதிக்கப்படவில்லை என்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும் என்று பல காங்கிரஸ் அங்கத்தினர்கள் சொன்னார்கள். அது மட்டுமல்ல, "சேவிங்ஸ் ஆன் கரன்ட் அக்கௌன்ட்" என்ற இனத்தில் கழிந்த ஆண்டு ரூ. 7 கோடி 83 லட்சமாக இருந்தது இந்த ஆண்டு வெறும் ரூ. 18 லட்சமாக வந்து நிற்கின்ற நிலைமையைத்தான் நாம் காண முடிகின்றது. அதோடு 'கமர்ஷியல் அண்டர்டேக்கிங்ஸ்' என்ற இனத்தில் 'இன்க்ரீஸ் இன் காஷ் பாலன்ஸ்' கழிந்த ஆண்டு ரூ. 71 லட்சமாக இருந்தது, அதே நேரத்தில், "டிக்கிரீஸ் இன் காஷ் பாலன்ஸ்" இந்த ஆண்டு ரூ. 4 கோடி 35 லட்சமாக காண்பிக்கப்பட்டிருக்கிறது. இந்த நிலையில் நம்முடைய யதார்த்த நிலை என்ன என்பதைப் பார்த்தால் நமக்கு மத்திய சர்க்காரிடமிருந்து வரவேண்டிய வருமானம் மிகவும் குறைந்திருக்கிறது. அதே நேரத்தில் மத்திய அரசாங்கத்திலிருந்து கிராண்டாகவும் லோன் என்ற இனத்தின் கீழும் அதிகமாக கொடுக்க முன் வந்திருக்கிறார்கள். அக்கௌன்ட் நம்பரில் 'மத்திய அரசாங்கத்திலிருந்து கிடைக்கக்கூடிய லோன்' இனத்தில் கழிந்த ஆண்டு ரூ. 15 கோடி 1 லட்சம் என்று இருந்தது இந்த ஆண்டு ரூ. 25 கோடி 93 லட்சமாக உயர்ந்து காணப்படுகிறது. அவர்களிடத்திலிருந்து கிடைக்கக்கூடிய தொகை மானியமாகவும் கடனாகவும்தான் கிடைக்கிறது. அமைச்சர் அவர்களுடைய பட்ஜெட் மெமோராண்டத்தில் நமக்கு ஏற்படுகின்ற குறைகளை சரிக்கட்டுவதற்காக மத்திய சர்க்காரிடத்தில் அதிகமான தொகை தர வேண்டும் என்று கோரியுள்ளோம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். மீண்டும் இதை வற்புறுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். நம்முடைய வருமானத்தில் துண்டு விழக்கூடிய 3 கோடி ரூபாயை உபரியாக மத்திய சர்க்காரிலிருந்து தருவதற்கு அவர்களுக்கு எந்தவிதமான கஷ்டமும் இருக்காது. நம்முடைய மாகாணத்தின் நிலைமையை எடுத்துக் கூறி மீண்டும் அதிக தொகை தர வேண்டும் என்று மத்திய சர்க்காரிடத்தில் கேட்க வேண்டும். (The HON. SRI. C. SUBRAMANIAM: What about other States?) மற்ற மாகாணங்களுக்கும் கொடுக்கவேண்டியது தான். நம்முடைய மாகாணத்தைப் பொறுத்தவரையில் நமக்கு இருக்கின்ற இன்டர்னல் ரிஸோர்ஸ்-களை பார்த்து நமக்கு முதலிடம் கொடுக்க வேண்டும் என்று மத்திய சர்க்காரைக் கேட்டுக்கொள்ளவேண்டும் என்று நமது சர்க்காரை கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, 11-வது வகுப்பு வரையிலும் ஏழைக் குழந்தைகளுக்கு இலவசமாக படிப்பு அளிப்பது என்று செய்திருக்கிற முடிவை நான் வரவேற்கிறேன். ஆனால் இதில் உண்மையிலேயே ஏழையாக இருக்கின்ற பலருக்கு இந்த நன்மை கிடைக்காமல்

[6th March 1961] [Sri R. Krishnasami Naidu]

போகலாம். குறிப்பிட்ட சம்பளம் வாங்கக்கூடிய ஒருசிலருக்கு இதனல் எந்த வித நன்மையும் கிடைக்காமல் போகலாம். அரிஜன வெல்பேர் டிப்பார்ட்மெண்ட்டிலிருந்து கொடுக்கப்படும் சில சலுகைகள் வாங்குவதற்காக சர்டிபிக்கேட்டுகளை கொடுத்து சலுகைகளை பெற்று விடுகிறார்கள். ஆகவே தாரதம்மியம் இல்லாமல் சகல மாணவர்களுக்கும் இந்தச் சலுகையை விஸ்தரிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அவ்விதம் இதை எல்லா மாணவர்களுக்கும் விஸ்தரித்தால்தான் நன்ருக இருக்கும். இதனல் பெரிய நஷ்டம் ஒன்றும் ஏற்பட்டு விடாது. ஆகவே இதையும் உடனடியாக அமலுக்கு கொண்டு வர வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, இந்த நிதிநிலே அறிக்கையை நன்ருகப் பார்க்கும் போது இது ஒரு தேர்தல் அறிக்கை போலவே உள்ளது என்பதை யாரும் மறுக்க முடியாது. ஏனென்ருல் இந்த ஆண்டு எடுத்துக்கொள்ளப்படும் வேலையைப் போல் அடுத்த ஆண்டு எடுத்துக்கொள்ள முடியாது. மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முதலாண்டாகிய இந்த ஆண்டில் ரூ. 48 கோடி செலவு செய்ய வேண்டும் என்று திட்டமிடப்பட்டிருக்கிறது. அதைப்பார்க்கும் போது அடுத்த ஆண்டு ரூ. 58 கோடி செலவு வேண்டியிருக்கும், அதற்கு அடுத்த ஆண்டு 64 கோடி ரூபாய், அதற்கு அடுத்த ஆண்டு 74 கோடி ரூபாய் இவ்விதம் செலவு செய்து கொண்டேயிருக்க வேண்டும். அதற்கான பண வசதிகளை நாம் தேடித்தாளுக வேண்டும். ஆகவே, இந்த ஆண்டு தாங்கள் சேகரித்த பணத்தை எப்படியெல்லாம் செலவு செய்வது என்கின்ற அடிப்படையில் திட்டங்களைப் போடாமல் இருக்கின்ற வசதிகளை ஐந்து ஆண்டுகளுக்குமாக பங்கிட்டு வரவு இவ்வளவு இருக்கிறது, செலவு இவ்வளவு என்று கணக்கிட்டு இந்த அறிக்கையை தயார் செய்து தருவார்கள் என்று நான் எதிர்பார்த்தேன். அப்படியில்லாத முறையில் தேர்தலுக்காக தயாரித்த ஓர் அறிக்கையைப் போன்று இது காட்சி அளிப்பது மிகவும் வருந்தத்தக்க விஷயம். இந்தத் திட்டங்களின் காரணமாக மக்கள்மீது வரிச்சுமை அதிகமாகும். இந்த ஆண்டு இல்லாவிட்டாலும்கூட அடுத்த ஆண்டு மக்கள் இதோடு இன்னும் அதிகமான அளவு வரிச்சுமையை தாங்க வேண்டிய நிலே ஏற்படும் என்பதை வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். இதை ஒரு தேர்தல் அறிக்கையாக எடுத்துக்கொண்டாலும்கூட இதைப்பார்த்து நாட்டிலுள்ள மக்கள் ஏமார்ந்துவிட மாட்டார்கள். சமீபத்தில் ஒரு குறுகிய காலத்திற்குள்ளாகவே ஒரு பெரும் வரிச்சுமையை தாங்கவேண்டிய நிலே ஏற்பட்டிருக்கிறது. விலேவாசிகள் எல்லாம் ஒவ்வொரு நாளும் ஏறிக் கொண்டேயிருக்கிறது. எந்த விதமான சம்பந்தமும் இல்லாமல், சில பொருட்களின் மீது விலே அதிகமாக உயர்ந்துகொண்டே போகிறது. சமீபத்தில் பாக்கு, தேயிலே, காப்பி, மண்ணெண்ணெய் போன்ற பொருட்களுக்கு விதிக்கப்பட்டிருக்கும் வரிகளுக்கு எந்தவிதமான பொருத்தமும் இல்லாத முறையில்,வியாபாரிகள் விலேயை உயர்த்திக்கொண்டே இருக்கிருர்கள். இப்போதுள்ள முறையை எடுத்துக்கொண்டால்

6th March 1961] [Sri K. Sattanatha Karayalar]

எக்ஸைஸ் மான்யத்தில் கிடைப்பதில் நமக்கு ஒரு பங்கு கிடைக்கக் கூடும். அதே சமயத்தில் தேசத்தின் வருமானம் எல்லாம் ஒரு சிலரின் கையில்தான் போய் சேருகிறது. அப்பேர்ப்பட்ட வியாபார சூதாடிகள் இந்தச் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டேயிருக்கிறார்கள். இதை அரசாங்கம் கட்டுப்படுத்த வேண்டும். இதற்காக கட்டுத்திட்டங்கள் இருக்கவேண்டும். நாஷனல் டெவலப்மெண்ட் கவுன்சில் கூட்டத்தில் இதைப்பற்றி விவாதித்து சில கட்டுத்திட்டங்களை கொண்டுவர வேண்டும். இதில் பாரபட்சம் இல்லாமல், நியாயத்திற்கு புறம்பான நிலையில் இல்லாமல் இருக்கின்ற ஒரு நல்ல முறையை வகுக்கவேண்டும். எக்ஸைஸ் இனத்தைப் பொறுத்தவரையில் நான் விரும்புவது எல்லாம், இந்த நாட்டில் இதன் மூலம் கிடைக்கின்ற வருமானம் முழுவதும் இந்த நாட்டுக்கே கிடைக்கக்கூடிய வழி இருக்க வேண்டும். இந்த இனம் ஒன்றுதான் எலாஸ்டிக்காக எதற்கும் விரிவுபடுத்தக்கூடிய முறையில் இருந்துகொண்டிருக்கிறது. ஆகவே, இதில் கிடைக்கின்ற வருமானத்தை நம்முடைய நாட்டு மக்களின் அடிப்படையிலோ அல்லது வேறு எந்த விதத்திலாவது நாம் பெறுகின்ற வகையில் இந்த மான்யம் இருக்கவேண்டும். ரயில்வே வருமானத்தை பொறுத்தவரையில் ரயில்வே பேர், ரயில் டாக்ஸ் என்று தனித்தனியாக இருக்கிறது. சமீபத்தில் வெளி வரக்கூடிய மத்திய சர்க்கார் அறிக்கையைப்பார்த்தால் இதில் நமக்கு வரவேண்டிய வருவாய்கூட மத்திய சர்க்கார் கையில் போய்விடுமோ என்று தோன்றுகிறது. இவைகளை எல்லாம் நாம் கொடுத்துவிட்டால் நாம் எந்த அளவுக்கு மத்திய சர்க்காரிடத்தி லிருந்து கிராண்டாக வாங்கப் போகிறோம் என்பதை திட்டவட்ட மாகச் சொல்லவேண்டும். இதில் சர்க்காருடைய கருத்து என்ன என்று தெரிவிக்கவேண்டும். இந்த முறையில் கொடுக்கக்கூடாது என்று நமது சர்க்கார் வற்புறுத்தவேண்டும். அப்படியே கொடுத் தாலும் எக்ஸைஸ் மான்யம் முழுதும் நமக்குக் கிடைக்கும் அளவுக்கு இந்தத் திட்டம் இருக்கவேண்டும் என்று வற்புறுத்திக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

இந்த பட்ஜெட்டைப் பொறுத்த மட்டில் தேர்தல் கண் ணோட்டத்தோடு தயாரிக்கப்பட்ட பட்ஜெட்டாக இருந்தாலும், நாட்டின் சோஷலிஸ லட்சியத்தை எட்டிப்பிடிக்க கமர்ஷியல் அண்டர்டேக்கிங்ஸ் ஏற்படுத்திவருகிறோம் என்று சொன்னாலும், வரக்கூடிய வருமானம் எப்படிப் போய்ச் சேருகிறது என்று சொன்னால் ஒரு சிலருடைய கையில் மட்டும் போய்ச் சேருகிறது— பணக்காரர்கள் கையில் போய்ச் சேருகிறது. இதைத்தவிர சோஷலிஸ சித்தாந்தப்படி இந்த இரண்டு ஐந்தாண்டுத் திட்டங் களில் ஒரு காரியமும் இல்லை. இடைக்காலத்தில் ஸ்டேட் டிரேடிங் எடுக்கப்போகிறோம் என்று சொன்னார்கள், ஆனால் அதுவும் கை விடப்பட்டிருக்கிறது.

அடிப்படையில் முதலாளித்துவத்திற்கு எதிராக இருக்கும் சர்க்கார் சோஷலிஸத்தைக் கொண்டுவருவதாகக் கூறிக்கொண்டு, அதே முறையைக் கையாண்டிருக்கிறதே தவிர, சோஷலிஸ லட்சி

யத்தை நோக்கி அழைத்துக்கொண்டு போகக்கூடிய திட்டங்கள் யாதொன்றுமில்லை என்று கூறிக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

* **Sri K. P. PALANISAMI :** கனம் தலைவர் அவர்களே, இன்றைய தினம் கனம் நிதி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கின்ற நிதி நிலை அறிக்கையைப்பற்றி எனது கருத்துக்களைத் தெரிவிக்க விரும்புகிறேன். எதிர்க்கட்சி நண்பர்கள் சிலர் இது எலெக்ஷன் மானிஃபெஸ்டோ என்று சொன்னார்கள். உண்மையில் காங்கிரஸ் கட்சி மாத்திரமல்லாமல் சட்ட சபையில் உட்கார்ந்திருக்கின்ற மற்ற கட்சிக்காரர்களும் இதைப்பற்றி பெருமையடைய இடமிருக் கிறது என்று சொல்லிக்கொள்ளுகிறேன். நம்மைத் தேர்ந்தெடுத்த லட்சக்கணக்கான மக்கள் சட்ட சபையில் என்ன நடக்கிறது என்று பேப்பரில் ஆவலோடு படித்துக்கொண்டிருக்கிறார்கள். ஏனென்றால் இந்த நாட்டில் கல்வி அறிவு பெருகியிருக்கின்ற காரணத்தினால் எல்லோரும் பேப்பர் படித்து நாட்டின் நிலையை உணர்ந்துகொள்ளக் கூடியவர்களாக இருக்கிறார்கள். ஆகையால் இந்த பட்ஜெட்டில் ஒன்றும் தவறில்லை என்று நான் கூறுகிறேன். எதிர் கட்சிக்காரர்கள் வேண்டுமானால் தவறு என்று கூறலாம்.

குறிப்பாக இந்த அறிக்கையில் நமது நாட்டு மக்கள் எல்லோரும் கல்வி பெறவேண்டும் என்று எஸ்.எஸ்.எல்.ஸி. வரையில் இலவசமாகக் கல்வி கற்க வசதி செய்யப்பட்டிருக்கிறது. குறிப்பாக தாழ்த்தப்பட்ட மக்கள் விஷயத்தில் 10 ஆண்டு காலம் சலுகை கொடுத்திருந்தோம். இருந்தும் அவர்கள் இன்னும் நல்ல முறையில் கல்வியறிவு பெறவில்லை. ஆகையால் அவர்களுக்கு கம்பல்ஸரி எடுகேஷன் கொடுப்பது நலம் என்று நினைக்கிறேன். நன்றாக கல்வி கற்றவர்கள் இவர்களில் 100-க்கு ஒருவர்கூட இல்லை. ஒரு சிலர் வேண்டுமானால் படித்து பெரிய உத்தியோகத்தில் இருக் கிறார்கள். கம்பல்ஸரி எடுகேஷன் கொண்டுவந்தால்—ப்ரொஹி பிஷன் வைத்திருப்பதால் பயந்து குடிக்காமல் இருக்கிறார்கள், அப்படிக் குடித்தாலும் வெளியில் தெரிவதில்லை, முன்பெல்லாம் குடித்துவிட்டு வீதியில் வருவார்கள், அந்த மாதிரி—ஹரிஜன சமுதாயத்தினர் நல்ல முறையில் கல்வி கற்க வசதி ஏற்படும் என்று நான் நினைக்கிறேன். அதைச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

குறிப்பாக நமது நாடு விவசாய நாடு. 75 பர்செண்டுக்கு மேல் விவசாய மக்கள். பத்து ஆண்டு காலத்தில் சிறு கைத் தொழில்களும் கனரகத் தொழில்களும் வந்திருக்கின்றன. விவ சாய நாட்டிலே விவசாயிகளுக்கு வேண்டிய கடன் வசதிகளை சர்க்கார் தாராளமாகக் கொடுக்கிறது. முன்பெல்லாம் செக்யூ ரிட்டி வைத்துக்கொண்டுதான் கடன் கொடுத்தார்கள். இப் போது பர்ஸனல் செக்யூரிட்டி மூலமாகக்கூட கடன் கொடுக்கிறார் கள். ஒரு குடியானவன் கிணறு வெட்டவும் பம்ப்செட் வைக்கவும் 3,000 ரூபாய் கடன் கேட்டால், அதில் கிணறு வெட்ட 1,500 ரூபாய் கொடுக்கிறார்கள். 30 அடி ஆழம் வெட்ட வேண்டுமென்று

குறிப்பிட்டுக் கொடுக்கிறார்கள். 20 அடி ஆழம் வெட்டியான வுடனேயே தண்ணீர் வந்து விடுகிறது. அதை இறைப்பதற்கு பம்ப்செட் வேண்டும். அந்த பம்ப்செட்டுக்கு பணம் கொடுக்க பி.டி.ஓ.விற்கோ, தாசில்தாருக்கோ அல்லது ஆர்.டி.ஓ.விற்கோ அதி காரம் இல்லை. சர்க்காருக்குப் போய்த்தான் ஸாங்ஷன் ஆகி வர வேண்டுமென்று சொல்லுகிறார்கள். அதையும் பரிசீலனை செய்ய வேண்டும். ஏழைக் குடியானவன் 1,500 ரூபாய் செலவழித்து கிணறு வெட்டி பம்ப்செட் கிடைக்கவில்லையானால் அவன் மேற் கொண்டு வேலை செய்ய முடிவதில்லை. 30 அடி ஆழம் வெட்டு வதற்கு வெளியில் வாடகைக்கு பம்ப்செட் வாங்கி கிணறை பூர்த்தி யாகக் கட்டிய பிறகுதான் பணத்தை வாங்க முடியும் என்று சொல்லுகிறார்கள். இந்த மாதிரி சட்டம் இருக்கலாம்.

**(Mr. Speaker in the Chair.)**

அல்லது கவலை மூலமாக இறைக்க வேண்டுமென்று சொல்லு கிறார்கள். இதையெல்லாம் நல்ல முறையில் பரிசீலனை செய்து விவசாயிகளுக்கு வேண்டிய உதவிகளைச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

எல்லா ஜில்லாக்களிலும் பல திட்டங்கள் இருந்தும் கோவை ஜில்லாவிற்கு ஒரு திட்டம்கூட கிடையாது. நமது நிதி அமைச்ச ருக்கு நன்றாகத் தெரிந்திருக்கும். நொய்யல் நதி என்று ஒரு நதி ஓடுகிறது. அதன்கீழ் 5,000 ஏக்கர் பாசனம் நடக்கிறது. அது கூட கோவை தாலூக்காவில் கிடையாது, அவனாசியில் கிடையாது. நிதி அமைச்சரையும், முதலமைச்சரையும் கேட்டிருக்கிறோம். குந்தா கழிவு நீரை கோவைக்கும் அவனாசிக்கும் கொடுத்தால் மிகவும் நலமாக இருக்கும் என்று கோவை மக்கள் சார்பாக, அவனாசி மக்கள் சார்பாக நான் கேட்டுக்கொள்கிறேன்.

நம் நாட்டில் பருத்தி போதவில்லையென்று வெளி நாட்டி லிருந்து 45,000 டன் வாங்கி வருகிறோம். அவ்வளவு பருத்தி யையும் நம் மாநிலத்திலேயே உற்பத்தி செய்ய முடியும். கோவை யின் வடக்கு பகுதியில் 3 லட்சம் ஏக்கர் இருக்கிறது. கரிசல் மண்ணும் களி மண்ணும் கலந்த பூமி. கம்போடியா பருத்திக்கு லாயக்கான பூமி. இந்த வசதியை ஏற்படுத்திக்கொடுத்தால் பருத்தியை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யவேண்டிய கஷ்டம் இருக்காது என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக ஹரிஜனங்கள் விஷயத்தில் நிலங்களை ஆர்ஜிதம் செய்கிறோம். அப்படிச் செய்யும்போது ஏக்கர் பூமி 5,000 ரூபாய் வரையில் ஆகிறது. இந்த ஆண்டு 5,000 ரூபாய் இருந்தால் அது அடுத்த ஆண்டு 10,000 ரூபாயாக மாறுகிறது. ஏனென்றால் பக்கத்து பூமிக்காரர்கள் வேண்டுமென்றே சர்க்கார் வாங்குவார்கள் என்று இன்னொரு நண்பருக்கு அதிக விலை போட்டு விற்கிறார்கள், விற்று தொகையை அதிகப்படுத்திக் காட்டுகிறார்கள். அதைப் பார்த்து மற்றவர்கள் விலை ஏறியிருக்கிறது என்று சொல்லி, 5,000 ரூபாய் இருந்ததை 10,000 ரூபாய் கொடுத்து வாங்கக்கூடிய நிலை ஏற்படுகிறது. அதைத் தடுக்க ஒரு சட்டம் கொண்டுவர வேண்டும்.

100 பேர்களுக்கு சேர்த்து சர்க்கார் வாங்கும்போது சர்க்கார் அதிகத் தொகை கொடுக்க வேண்டியிருக்கிறது. இதைத் தடுக்க சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும்.

அடுத்தபடியாக, கோவை நகரத்தில் குடி தண்ணிர் இல்லாமல் மக்கள் அதிகமாக கஷ்டப்படுகிறார்கள். இந்த ஆண்டு மழை சுமாராக இருந்ததால் தண்ணீர் சுமாராகக் கிடைக்கிறது. மேற்குப் புறத்தில் சில இடங்களில் தண்ணீர் கிடையாது. இப்போது அங்கு ஆட்சி வேறு மாறியிருக்கிறது. சீட்டு கொடுத்து சீட்டு மூலமாக தண்ணீர் எடுக்கவேண்டுமென்று சொல்லுகிறார்கள். இது பெரிய பிரச்னையாக இருக்கிறது. 20-30 வருஷங்களுக்கு முன்பு கட்டப்பட்ட ரிஸர்வாயர் 25,000 பேர்களுக்குத்தான் போதுமானதாகக் கட்டப்பட்டுள்ளது. இப்போது 4 லட்சம் ஜனங்கள் வசித்து வருகிறார்கள். ஆக இந்த ரிஸர்வாயரை ஆழப்படுத்தவும், அகலப்படுத்தவும் சர்க்கார் மான்யம் கொடுத்தால், லோகல் போர்டு மூலமாக அவர்களும் பணம் போட்டு நல்ல முறையில் வசதி செய்ய முடியும். கோவை ரூரல் ஏரியாவில் 8 பஞ்சாயத்துக்கள் இருக்கின்றன. 30,000 வரையில் ஜனத்தொகை இருக்கிறது. அங்கே குடிதண்ணீர் போதவில்லை. பெரியநாயக்கன்பாளையத்தில் கவர்ன்மெண்ட்பிரஸ் ஆரம்பித்திருக்கிறார்கள். அதற்காக பவானி ஆற்றிலிருந்து அந்த இடத்திற்கு தண்ணீர் கொண்டுவர ஏற்பாடாகிக் கொண்டிருக்கிறது. அதிலிருந்து 9 மைல் தூரம் கொண்டுபோனால் மற்ற ஏரியாவிலும் தண்ணீர் சப்ளை செய்யமுடியும். குழாயின் டயாமீட்டரை அதிகப்படுத்தி, கோவை டவுன் ஏரியா, ரூரல் ஏரியா எல்லாவற்றிற்கும் தண்ணீர் வசதி செய்து கொடுத்தால் நலமாக இருக்கும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அதோடு கோவை மாவட்டம் கல்வி விஷயத்தில் கடந்த 10 ஆண்டுகளில் முன்னேறியிருக்கிறது. ஏற்கனவே மெடிகல் காலேஜ் வேண்டுமென்று நண்பர்கள் விண்ணப்பம் செய்துகொண்டிருக்கிறார்கள். ஆறு மாதங்களுக்கு முன்பு டிஸ்ட்ரிக்ட் டெவலப்மெண்ட் கவுன்ஸில் மூலமாக தீர்மானம் போட்டு அனுப்பியிருக்கிறோம். ரெயில்வே ஸெஸ் பண்டில் 25 லட்சம் ரூபாய் இருக்கிறது. அதோடு கோவை உள்வட்டாரத்தில் கொஞ்சம் வசூலித்துக் கொடுக்கலாம். சர்க்காரும் கொஞ்சம் பணம் போட்டு மெடிகல் காலேஜை ஸாங்ஷன் செய்யவேண்டுமென்று தீர்மானம் போட்டு அனுப்பியிருக்கிறோம். அதை கூடிய சீக்கிரம் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு எனது உரையை முடித்துக்கொள்கிறேன்—வணக்கம்.

11-30 a.m.

* Sri A. A. RASHEED: Mr. Speaker, Sir. There is a misconception regarding the functions of the Members of this House. Many people think that we are only members of a particular party with party affiliations and they forget that we are members elected by the people. We represent a certain particular population of the country. Whenever opportunities come, it is our duty that we should express the various acts of commission and omission to the Government. I think it is natural that even the members of the party in power should speak occassionally on certain things and

6th March 1961] [Sri A. A. Rasheed]

bring them to the notice of the Government though they may not be palatable to the Government. I am not prefacing my speech with the view to attack the Government, for it is not necessary that one should support the Government always and not say about various actions of commission and omission.

Sir, the Budget speech of the Minister for Finance has been welcomed by all, being a Budget of the common man, a Budget without taxes, a Budget which records the past developments, a Budget which inspires confidence in the future. On the other hand it has been criticised as a pre-election Budget which does not give any concern regarding the ever increasing price of food articles, a Budget which does not solve the educated unemployment and also has been attacked for various other things. The Budgt speech of the Finance Minister has been the longest since the last 5 years which gives the past achievements and also the various steps taken for the implementation of the Third Five-Year Plan.

While welcoming the Hon'ble Minister's speech in not levying new taxes this year, I wish to state it is not only a short lived pleasure, since the Union Government have compensated this by levying taxes which affect from prince to peasant throughout the country. Sir, whether taxes are paid in the form of sales tax or excise duty or import duty it is the people who have to pay the tax. Whether the melon falls on the knife or the knife falls on the melon it is the melon which is cut. In the same way whether the State Government or the Central Government levies the tax it is the people who are affected by it. Recently the price of kerosene, tea, cloth and several other articles have risen because excise duties on these have been increased. I request the Government to see that the prices are brought under control.

I welcome the proposal of the Government to give free education to all poor boys up to XI Standard. But we must remember that poverty is not the monopoly of the socially backward communities alone but poverty exists even in the so-called forward communities. Even scholarships should be awarded only on the basis of poverty and not on the basis of communal status.

I regret to state that the Government have not expressed its concern regarding the ever increasing price of food articles.

Sir, let us remember that a pyrrhic victory in the economic battle field is not a victory. A victory which is gained after an enormous cost is no victory at all. We say that the production has increased, but at the same time the prices have also increased. Recently in an answer to a question the Home Minister, the Hon. Sri M. Bhaktavatsalam, said that the increase in price is due to the increase in population and also due to the increase in purchasing power and spending power of the public. I do not know how far this is true.

Many members recently expressed their concern regarding the decline in the price of agricultural produce. But they have not cared to think of the interest of the consumers.

[Sri A. A. Rasheed] [6th March 1961

As far as salaried persons and wage-earners are concerned, the prices have gone up beyond their reach. After all let us remember if this is not checked there will be a demand for more wages and more salaries and this will go on in a vicious circle.

I would like to congratulate our Government on maintaining communal harmony in our State. Our State has been free from communal discard and riots. Although there were some troubles here and there for the last four years, our Government have been very strict. I would request the Government to ban all the communal organizations whether they belong to this community or that community. The organization which sows seeds of discard must be totally banned. Election is fast approaching. These people may take advantage of it and will see that communal riots are started to further their own interest.

I would like to point out to this House that Muslims are also citizens of this country and they have got every right in the administration. Hence they cannot be classified as somebody. Their loyalty must not be doubted. Whatever the Government do they should do it in the interests of all communities and not in the interests of a particular community.

We have been relying too much on the Neyveli Project We have put all our eggs in one basket. I do not know whether it is proper to rely too much on the integrated projects. It is true that we will be starting many industries because of this one project. But let us also think of the danger that lies ahead. I feel as far as this project is concerned there may not be any risk. At the same time I would also request the Hon. Minister to emphasise once again to the Central Government the need for the starting of a steel plant. Criticism is levelled against the Union Government that steps for starting of a steel plant are taken in a leisurely manner. It may or may not be true. So far as we are concerned, our State, which is industrially backward, should get a steel plant as early as possible.

I must also say that the Minister at the Centre has damped all our hopes of getting oil refinery for our State. It has been said that we have oil in the Cauvery basin. If there is oil in the Cauvery basin why should there be delay in starting oil refinery for our State. After all there is not a single refinery in South India.

Sir, I regret to say that the leather industry has always been treated in a step-motherly fashion. The Government seems to be guided by the bureaucracy which knows nothing about the trade. They do not seem to care for either the advice of the people in the trade or of the experts. Auction should be held in Madras for E.I. Tanned Goat and Sheepskins. By holding an auction for this industry in the Madras State we will be saving Rs. 50 lakhs by way of commission and we will be able to give employment for thousand people. But the Hon. Minister for Industries recently said that he was not in favour of holding such an auction here.

6th March 1961] [A. A. Rasheed]

Sir, recently, the tanners approached the Government for leave to pay the arrears of sales tax in instalments. Even that request has not been granted. Instead of coming to their help, coercive steps are being taken against them. It is but proper on the part of the Government that they should go to the aid of the industry which is suffering. Though there may not be slump in the industry nobody can deny the fact that this industry requires a lot of help and co-operation from the Government.

We are living in an age of mechanisation. But we are spending too much money on cottage industries. I wish to refer to one particular matter in this connection. Though the number of people engaged in the production of Khadi has increased from 26,500 to 181,000 in a period of 10 years, i.e., from 1950-51 to 1960-61, the production of Khadi has gone up from 66 lakhs yards to only 80 lakhs yards. I do not know the reason for such meagre return for such large investment. There are still certain industries where we find that the return that we have is very small and I request the Government that they should enquire into the working of these industries to see how far they can get income and proper return from them.

SRI T. L. SASIVARNA THEVAR : கனம் சபாநாயகர் அவர்களே, நமது நிதி அமைச்சர் அவர்கள் சமர்பித்துள்ள வரவு செலவு திட்டத்தின்மீது சில வார்த்தைகள் தெரிவித்துக்கொள்ள இஷ்டப் படுகிறேன். அமைச்சருடைய பிரசங்கமானது வருங்கால தேர்தல் அறிக்கைக்கு ஒப்பாக இருந்தது என்று எதிர்க்கட்சிக்காரர்கள் சொன்னதை இங்கு ஆளும் கட்சிக்காரர்கள் பல முறை பல கோணங்களிலிருந்து எதிர்த்தார்கள். ஆனால், அமைச்சர் அவர்களுடைய பிரசங்கமானது பரிபூரணமாக, ஒன்று அல்லது இரண்டு முறை அல்ல பல முறை படித்துப் பார்த்தாலும்கூட தேர்தல் பிரசங்கம் செய்யப்பட்டிருப்பது போல என் போன்றவர்களுக்குத் தென்படுகிறதே தவிர, வேறு ஒன்றும் இல்லை என்று உங்களுக்கு அறிவித்துக்கொள்ளுகிறேன்.

முதற்கண் இந்த நாட்டில் உள்ள நிலைமையைப்பற்றி, விலைவாசி ஏற்றத்தால் மக்கள் படக்கூடிய அவதியைப்பற்றி ஒரு வார்த்தை கூட அமைச்சர் அவர்களுடைய பிரசங்கத்தில் கூறப்படவில்லை. இங்கு பட்ஜெட் சமர்ப்பிக்கப்பட்டதும், அதை அடுத்து மத்திய சர்க்கார் பட்ஜெட் சமர்பிக்கப்பட்ட பிற்பாடும் மக்களிடையே திருப்தி இருக்கிறதா என்பதைப் பொறுத்துத்தான் நாம் ஒரு முடிவுக்கு வரவேண்டுமே ஒழிய ஆளும் கட்சியினர் பட்ஜெட்டை ஆதரிப்பதினாலும், எதிர்க்கட்சிக்காரர்கள் பட்ஜெட்டை எதிர்ப் பதினாலும் நிலைமை ஒன்றும் மாறிவிடாது என்பதை உங்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.

நமது நாடு விவசாய நாடு. பெரும்பாலும் விவசாய முன் னேற்றத்திற்கு முதல் இடம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதாக அவர்களும் பிரசங்கத்தில் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் அவ் வாறு கொடுக்கப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் இல்லை. பெரிய

[Sri T. L. Sasivarna Thevar] [6th March 1961

நீர்ப்பாசன திட்டங்கள் பூராவும் அநேகமாக முடிந்துவிட்டது. என்று அமைச்சர் அவர்களே கூறியிருக்கிறார்கள். சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு அடுத்து முக்கியத்துவம் கொடுக்கப்படும் என்று சொல்லியிருந்தாலும், அம்மாதிரி கொடுக்கப்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் இல்லை. ஒரே ஒரு காரணத்தை மட்டும் குறிப்பிட விரும்புகிறேன். நமது மாநிலத்தில் 27,000 குளங்கள் இருக்கின்றன. அதில் பெரும் பகுதி குளங்கள் மேடாக இருக்கின்றன. இந்தக் குளங்களின் பரப்பைக் குறைத்து ஆழப்படுத்தினால், மழை பெய்தால் பூரா தண்ணீரும் அதில் தேங்கி அதிகமாக பிரயோஜனப்படும் என்று அவர்களே குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால் அதற்காக ஒதுக்கப்பட்ட தொகையை பார்த்தால் மிகவும் சுருக்கமாக இருக்கிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இந்தத் திட்டத்திற்காக சுற்றேறக்குறைய 36 லட்ச ரூபாய் செலவழிக்கப்பட்டிருக்கிறது. அதன் மூலம் மராமத்து செய்யப்பட்ட குளங்கள் 47. மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்தில் பூராவுக்குமே சேர்ந்து 80 லட்ச ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள். அதைப் பார்க்கப்போனால் வரக்கூடிய ஐந்தாண்டு காலத்தில் இன்னும் வேண்டுமானால் 100 குளங்கள் மராமத்து செய்யப்படலாம். அதற்கு மேற்பட்டு முடியுமா என்பதை அமைச்சர் அவர்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும். 1966-ல் 100 குளங்கள் செப்பனிடப்படும் என்றால், 27,000 குளங்களை சரிவர மராமத்து செய்வதற்கு எவ்வளவு காலம் பிடிக்கும் என்பதை சிந்தித்துப் பார்க்கவேண்டும். (குறுக்கீடு.) சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு எதேஷ்டமான பணம் ஒதுக்கவேண்டும் என்பதை ஞாபகப்படுத்துகிறேன்.

கிழக்கு ராமநாதபுரம் மிகவும் பிற்பட்ட பகுதி என்பது எல்லோராலும் ஒப்புக்கொள்ளக்கூடிய விஷயம். அந்தப் பகுதிக்கு இன்றியமையாத இரண்டு திட்டங்களும் இந்த பட்ஜெட்டில் சேர்க்கப்படவில்லை. ஒன்று அப்பர் பெரியார் ஸ்கீம். அதைப்பற்றி பேச்சே காணோம். சமீபத்தில் பேசிய கேரள மந்திரி அவர்கள் கூட பெரியார் தண்ணீரை தமிழ் மகாணத்திற்கு திருப்பிவிட வேண்டும் என்ற கோரிக்கையை நம்முடைய மாநில சர்க்கார் கேட்கவில்லை என்று குறிப்பிட்டிருக்கிறார். கிழக்கு ராமநாதபுரம் பகுதிக்கு இன்னொரு அத்தியாவசியமான திட்டம் சேதுசமுத்திர திட்டம். அதுவும் சேர்க்கப்படவில்லை. தூத்துக்குடி துறைமுகத் திட்டம் சேர்த்திருப்பதைப்பற்றி சந்தோஷப்படுகிறேன். ஆனால் சேதுசமுத்திரத் திட்டம், தூத்துக்குடி திட்டம் இரண்டையும் சேர்த்தால்தான் நன்மை பயக்கும் என்று கவர்னர் அவர்களின் உரையின்மீது விவாதம் செய்தபொழுது நான் பேசியிருக்கிறேன். அதை மனப்பூர்வமாக நிதி அமைச்சர் அவர்களும் ஒத்துக்கொண்டு சொல்லியிருக்கிறார்கள். சேதுசமுத்திரத் திட்டம் இல்லாதவரையில், தூத்துக்குடி திட்டம் மாப்பிள்ளை இல்லாமல் கலியாணம் செய்வது போன்று இருக்குமே தவிர, வேறு ஒன்றும் இல்லை. அப்பர் பெரியார் திட்டம் இப்பொழுது நிறைவேற்றப்படவில்லை என்று சொல்லுகிறபொழுது கிழக்கு ராமநாதபுரத்தின் முன்னேற்றமானது ஒரு ஐந்து வருட காலத்திற்கு தள்ளிப் போடப்பட்டிருக்

6th March 1961] [Sri T. L. Sasivarna Thevar]

கிறது என்று தான் சொல்லவேண்டும் என்பதை நான் வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்ளுகிறேன். இதை இன்னும் பரிசீலனை செய்து அதற்குரிய இடத்தை கொடுப்பதற்கு அரசாங்கம் முயற்சி செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். பெரியார் திட்டம் அரசியல் காரணத்திற்காக ஒதுக்கப்பட்டிருக்கிறதா என்றுகூட சந்தேகிக்க வேண்டியிருக்கிறது. அதுமாதிரி இல்லையென்றால், சற்றேறக்குறைய ஐந்தாண்டு காலமாக பலமுறைகள் கேட்டுக்கொண்ட போதிலும்—நான் மட்டும் அல்ல ஆளும் கட்சி அங்கத்தினர்களும் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள் — உடனே அதற்கு வேண்டிய முயற்சிகளை அரசாங்கம் எடுக்காத போனால், நிச்சயமாக அரசியல் காரணத்திற்காகத்தான் இது ஒதுக்கப்பட்டிருக்கிறது என்ற சந்தேகம் மீண்டும் வலுக்கும் என்பதை உங்களுக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, ஒரு முக்கியமான பிரச்னையை சொல்ல இஷ்டப்படுகிறேன். இந்த மாநிலம் எந்த வகையில் முன்னேற்றம் அடையாமல் போனாலும்கூட வேறு இரண்டு வகைகளில் சிறப்பான முன்னேற்றம் அடைந்திருக்கிறது ஒன்று கள்ளச்சாராயம் காய்ச்சுவது, இரண்டாவது கள்ள நோட்டு அடிப்பது. இந்த இரண்டு காரியங்களையும் பற்றி நிதி அமைச்சர் அவர்கள் தன்னுடைய பிரசங்கத்தில் ஒன்றுமே கூறவில்லை. தமிழகம் சம்பந்தப்பட்ட மட்டில் கள்ளச் சாராயம் காய்ச்சுவது . . .

**THE HON. SRI C. SUBRAMANIAM :** உங்கள் சர்க்கார் ஏற்படும்பொழுது நீங்கள் இந்த மாதிரி சிறப்புக் காரியங்களை குறிப்பிடுங்கள்.

**SRI T. L. SASIVARNA THEVAR :** இந்தக் காரியங்கள் இல்லாமல் செய்வதற்கு நாங்கள் முயற்சி செய்வோம். இந்தக் கள்ளச் சாராயம் காய்ச்சும் தொழில் மாநிலம் பூராவும் ஒரு குடிசைத் தொழிலாக பரவி இருக்கிறது அது சீரும் சிறப்பாக இயங்கிக்கொண்டு வருகிறது. வரவர தேர்தல் நெருங்க நெருங்க அந்தத் தொழிலில் ஈடுபட்டவர்கள் காங்கிரஸ் ஸ்தாபனத்தோடு சம்பந்தப்படுத்தப்படுகிறார்கள் என்று சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். கள்ளச் சாராயம் காய்ச்சுபவர்கள் அந்தத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்கள் இளைஞர் காங்கிரஸ் அங்கத்தினர்களாகவும், தலைவர்களாகவும் சேர்க்கப்பட்டு ஜமாவாக நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டு வருகிறது.

கள்ள நோட்டுகள் அச்சடிக்கும் தொழிலும் நாட்டிலே பரவலாக இருக்கிறது. சமீபத்தில் நடந்த வழக்கின் காரணமாக நாட்டிலே மக்கள் 100 ரூபாய் நோட்டுகளை வாங்கவே பயந்தார்கள். இந்த சந்தர்ப்பத்தில் மத்திய சர்க்கார் அறிக்கை ஒன்று வெளி வந்தது. இம்மாதிரி கள்ள நோட்டுகள் புழக்கத்தில் இருப்பது வாஸ்தவம் என்றாலும், அது மிகவும் உபாயமான அளவிற்குத்தான் இருக்கிறது, அதைப்பற்றி பயப்படவேண்டிய அவசியம் இல்லை என்று அந்த அறிக்கையில் தெரிவிக்கப்பட்டது. அதன் காரணமாக கள்ள நோட்டுகள் நல்ல நோட்டுகள் மாதிரி எங்கு பார்த்தாலும் நல்ல முறையில் புழக்

கத்தில் இருக்கிறது. பொருளாதார அடிப்படையில் நான் சொல்லுகிறேன். நம் நாட்டில் இந்தப் பழக்கம் அனுமதிக்கப் பட்டால் பொருளாதார அடிப்படையில் இயங்கும் ஆட்சி முறைக்கே ஒரு பெரிய ஆபத்து ஏற்படும் என்பதை ஞாபக மூட்ட விரும்புகிறேன். ஒரு கட்சிக்காரர்கள் செய்து வருகிறார்கள், அல்லது தனிப்பட்டவர்கள் செய்துவருகிறார்கள், என்று நான் குற்றச்சாட்டு சொல்லவில்லை. ஆனால் பரவ லாக இம்மாதிரி கள்ள நோட்டுகள் அச்சடிக்கப்பட்டு புழக் கத்தில் இருக்கின்றன என்பதை எங்கு பார்த்தாலும் மக்கள் பேசிக்கொண்டிருக்கிறார்கள் என்பதை அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். கூடிய சீக்கிரம் இந்த நிலைமையைப் போக்க வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கவேண்டும். இதை அனுமதித்தால், இந்தத் தொழில் சீரும் சிறப்பாக தமிழக மட்டுமல்லாமல், நாடு பூராவிலுமே பரவிவிடும் என்பதை உங்களுக்கு ஞாபகப்படுத்திக்கொள்ளுகிறேன்.

நமது நிதி அமைச்சர் அவர்கள் எதிர்க்கட்சியினர் மீது தாக்கு தல் செய்வதை இப்பொழுது சர்வசாதாரணமாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஜனநாயகத்தைப் பற்றி ஜாஸ்தியாக அவர்கள் பேசுகிறார்கள். நாங்களும் ஒப்புக்கொள்ளுகிறோம். ஜனநாயக அடிப்படையில் ஆட்சி நடக்கிறது. ஜனநாயகத்தில் அவர்கள் பரிபூரண நம்பிக்கை வைத்திருக்கிறார்களா, ஜனநாயக முறையில் நடக்கிறார்களா என்றால், மந்திரி சபையோ அல்லது முக்கியமாக நிதி அமைச்சர் அவர்களோ அம்மாதிரி நடக்கிறார் களா என்று பார்க்கப்போனால், அம்மாதிரி அவர்கள் நடப்பதில்லை என்பதற்கு பல சான்றுகள் கூறலாம். முக்கியமாக ஒரு சான்று கூறுகிறேன். அண்மையில் ஒரு தகராறு நடந்தது உங்களுக்குத் தெரியும். நமது நிதி அமைச்சர் இலாகாவிலிருந்து நடந்த கவர்ன் மெண்ட் பிளீடர் நியமனம் சம்பந்தமாக ஹைகோர்ட்டு அவரை நியமனம் செய்தது நல்ல முறையில் அல்ல என்று தீர்ப்பு அளித்தது. உண்மையில் நிதி அமைச்சர் அவர்கள் உடனே ராஜிநாமா செய்துவிடுவார்கள் என்று எதிர்பார்த்தேன். அவர் அப்படி செய்யவில்லை. சமீபத்தில் ஆந்திராவில் ஒரு தகராறு ஏற் பட்டது. ஆந்திராவிலும் காங்கிரஸ் மந்திரி சபைதான் நடக்கிறது. இங்கேயும் காங்கிரஸ் ஆட்சிதான் நடக்கிறது. ஆனால் ஆந்திராவில் ஒரு காரியம் தவறாகச் செய்யப்பட்டது என்று உயர் நீதிமன்றம் தீர்ப்பு அளித்ததன் காரணமாக உடனே சம்பந்தப்பட்ட மந்திரி ராஜிநாமா செய்ததாக பத்திரிகையில் பார்த்தோம். அங்கேயும் காங்கிரஸ் ஆட்சிதான் நடக்கிறது. இங்கேயும் காங்கிரஸ் ஆட்சி தான் நடக்கிறது. நாம் எல்லோரும் ஜனநாயக அடிப்படையிலே உயர்நீதி மன்றத்திற்கு கொடுக்கும் மதிப்பில் தவறக்கூடாது. நம் எல்லோருக்கும் முக்கியமான பாதுகாப்பு ஸ்தாபனம் உயர்நீதி மன்றம்தான். அந்த மன்றத்தின் தீர்ப்புக்கு நாம் கீழ்ப்படிய மறுத் தோமேயானால், அது ஜனநாயகம் அல்ல என்பதை நிதி அமைச்சருக்கு நான் தெரிவித்துக்கொள்கிறேன். நேற்று முன் தினம் இங்கே பேசிய நேரத்தில் ஒரு எதிர்க்கட்சி அங்கத்தினர்மீது

[Sri T. L. Sasivarna Thevar]

கடுமையான வார்த்தையை உபயோகித்து நிதி மந்திரி அவர்கள் கூறினார்கள். எதிர்க்கட்சியிலுள்ளவர்களுக்கு ஜனநாயகமே தெரியவில்லை என்று சொன்னார்கள். இதைச் சொன்னபொழுது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. மேலே நான் எடுத்துக் கூறியதுபோல் ராஜினுமா செய்யத் தவறியவர்கள் எங்களுக்கு ஜனநாயகத்தைப் பற்றி உபதேசித்தால், இங்கே ஜனநாயகம் எப்படி இருக்கிறது என்பதைத்தான் நான் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். இந்த மந்திரி சபை ஆரம்ப காலத்தில் அவர்களுக்கு ஓட்டுப்போடவில்லை என்ற காரணத்திற்காக எங்கள் பகுதியிலே 5 பேரைக் கட்டிவைத்து சுட்டார்கள். இது உலகு அறிந்த விஷயம். இந்த மாதிரி சபையை ஒரு கொலைகார மந்திரிசபை என்று நான் கூறுவேன். அந்த மாதிரி அவர்கள் செய்யவில்லை என்று நிரூபித்தார்களா என்று கேட்கிறேன். ஆகவே சர்வாதிகாரத்ப் போக்கை ஜாஸ்தியாகக் கையாண்டு கொண்டு, ஜனநாயகத்தைப் பிரசாரம் செய்வது நல்லதல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்தத் திட்டங்களில் எல்லாம் எங்கள் பகுதி புறக்கணிக்கப் பட்டே வந்திருக்கிறது. ஆகவே சேதுசமுத்திரத் திட்டம், மேல் பெரியாறு திட்டம் ஆகிய திட்டங்களை நிறைவேற்றவேண்டும் என்று மீண்டும் ஒருமுறை கேட்டுக்கொண்டு என்னுடைய உரையை முடித்துக்கொள்கிறேன்.

* SRI A. S. SUBBARAJ : சபைத் தலைவர் அவர்களே, 1960-61-வது பட்ஜெட்டை ஆதரித்து ஒருசில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். மிகவும் அழகாகவும், விரிவாகவும், விளக்கமாகவும் இந்த பட்ஜெட்டை தயார் செய்த கனம் நிதி மந்திரி அவர்களுக்கு எனது பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முதலாவதாக, உணவு உற்பத்திக்கு முதலிடம் கொடுத்திருப்பதை நான் வரவேற்கிறேன். அதிகமான அணைக்கட்டுகளைக் கட்டி எல்லாப் பெரிய நீர்ப்பாசனத் திட்டங்களைப் பூர்த்தி செய்துவிட்ட போதிலும், கல்லாறு, மேல் பெரியாறு திட்டங்கள் மூலமாக நாம் இன்னும் உணவு உற்பத்தியைப் பெருக்க முடியும். இந்தத் திட்டங்கள் பல ஆண்டுகளாக பேசப்பட்டு வந்த திட்டங்கள். கேரள சர்க்காருடன் கலந்து, அவர்களை அணுகி, அவர்களுக்கு வேண்டிய மின்சாரத்தைக் கொடுத்தாவது நமக்கு வேண்டிய தண்ணீரைப் பெற நமது நிதி அமைச்சர் அவர்களும், முதல் மந்திரி அவர்களும் முயற்சி எடுத்துக்கொண்டால் நிச்சயமாக இந்தத் திட்டங்கள் நிறைவேற்றப்படும் என்று நினைக்கிறேன். இந்த மாதிரித் திட்டங்களை மத்திய சர்க்கார் மூலம் வற்புறுத்திச் செய்யும்படி நான் மீண்டும் கேட்டுக்கொள்கிறேன். இவைகளின் மூலமாக வருகிற ஐந்தாண்டுத் திட்டத்தில் நாம் இன்னும் அதிகமாக உற்பத்தியைப் பெருக்க முடியும்.

மதுரை, ராமநாதபுரம் ஜில்லாக்களிலே அதிகமான ஜமீன்கள் இருக்கின்றன. இந்த ஜமீன் பிரதேசத்தில் பல குளங்கள் சரியாக செப்பனிடப்படவில்லை என்பது எல்லோருக்கும் தெரிந்ததே.

இதற்குப் போதுமான தொகை ஒதுக்கப்படவில்லை. ஆகவே இன்னும் அதிகமான தொகையை ஒதுக்கி உடனடியாக இவைகளை எடுத்துக் கொண்டால் உணவு அபிவிருத்தியிலே நல்ல முன்னேற்றம் காணமுடியும்.

அடுத்தபடியாக, கால்நடை அபிவிருத்தியை எடுத்துக் கொண்டால் எங்கள் பிராந்தியத்திலே மேற்குத் தொடர்ச்சி மலை இருக்கின்ற காரணத்தினால் புல் வளர்ப்புக்கு அங்கே சௌகரிய மாக இருக்கிறது. ஆகையால், திட்டத்தில் குறிப்பிட்டிருக்கும் 5 மேச்சல் பண்ணைகளில் ஒன்றை எனது தொகுதியில் அமைக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

காட்டு வளத்தை எடுத்துக்கொண்டால், கணிசமான அளவுக்கு நாம் முன்னேறியிருக்கிறோம். மதுரை ஜில்லாவிலே, அதுவும் என்னுடைய பிராந்தியத்திலே அதிகமான அளவுக்கு இலவம் பஞ்சு மரங்களை விவசாயிகள் வளர்க்கிறார்கள். இந்த மரங்கள் அங்கே அதிகமாக விருத்தியாகின்றன. முந்திரி மரங்களை நடுவது போல், காட்டு இலாகாவினரே இந்த இலவம் பஞ்சு மரங்களை நட்டால், அதிக வருமானம் வரும். அங்கே ஜமீன்கள் ஒழிந்த வுடனே, பல விவசாயிகள் மரங்களை நட்டு அதன் மூலமாக நல்ல பலனை அனுபவித்துக்கொண்டு வருகிறார்கள். அவர்களுக்கு பட்டா கொடுக்காமல் இருப்பதால் மிகவும் அவதியான நிலையிலே இருக்கிறார்கள். அவர்களுக்கு பட்டாக்களைக் கொடுக்குமாறு நான் மிகவும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

தொழில் வளர்ச்சியை எடுத்துக்கொண்டால் நம்முடைய நாடு நல்ல முறையில் முன்னேறியிருக்கிறது. நம் நாட்டிலே வளருகிற தொழில்களைப் பார்க்கும்பொழுது, ஆச்சரியமான மாறுதல் ஏற் படும் என்பதில் சந்தேகமில்லை. சென்னை நகரிலும் முக்கியமான நகரங்களிலும் கனரகத் தொழில்களும், மற்ற தொழில்களும் அதிகமாக ஏற்பட்டுள்ளன. இந்தத் தொழில்களுக்கெல்லாம் ஒரே பகுதியில் லைசென்சு கொடுக்கப்பட்டு அங்கே நடைபெறுகின்றன. இனிமேல் வரக்கூடிய தொழில்களையாவது பரவலான முறையில் பிற்போக்கான பகுதிகளிலே ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். ரெயில்வே வசதி, மற்ற வசதிகள் வேண்டுமென்று சொன்னாலும்கூட அம்மாதிரி வசதியுள்ள சில இடங்களைத் தேர்ந்தெடுத்து, அந்த மாதிரி இடங்களுக்கு லைசென்சு கொடுத் தால் நெருக்கடியை ஓரளவுக்குத் தவிர்க்க முடியும் என்று தெரி வித்துக்கொள்கிறேன்.

போக்குவரத்து வசதிகள் நல்ல முறையிலே முன்னேறியிருக் கின்றன. இருந்த போதிலும் மண் ரோடுகள் கிராமங்களிலும் சுற்றுப் புறங்களிலும் காணப்படுகின்றன. உடனடியாக இந்த கிராம ரோடுகளுக்கு கல்லைப் போட்டுக் கொடுக்கவேண்டும். அப்படிச் செய்தால் பஸ் போக்குவரத்துக்கு வசதியாக இருக்கும். எனது போடிநாயக்கனூர் தொகுதியிலே வலசதுறைப்பாலம் பல ஆண்டுகளாகப் பேசப்பட்டு வருகிறது. உடனடியாக அந்தப் பாலம் கட்டுவதுடன் அகமலை ரோடு திட்டத்தை மூன்றாவது திட்டத்தில் சேர்க்கும்படிக் கேட்டுக்கொள்கிறேன்.

6th March 1961] [Sri A. S. Subbaraj]

அதோடு, கூட்டுறவுத் துறையில் பார்த்தால் நல்ல வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. வீடு கட்டும் சங்கங்களில் இப்பொழுது 5 மடங்கு தொகை கடனுகக் கொடுக்கிருர்கள். ஏழைகளும், குறைந்த வருமானமுள்ளவர்களும் வீடுகள் கட்ட வேண்டுமென்று சொன்னுல், இதைப் பத்து மடங்காக உயர்த்துவது அவசியம். அதன்மூலம் நாம் பணத்தை வீணுக்காமல், இன்னும் அதிகமான வீடுகளைக் கட்ட முடியுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

எல்லா ஏழைக் குழந்தைகளுக்கும் இலவசக் கல்வி கொடுத்திருப்பதானது மிகவும் போற்றத்தக்கது. அதை யாரும் மறுக்க முடியாது. எனக்கு முன்பு பேசியவர்கள் எடுத்துக் காட்டியது போல், சாதாரண சம்பளம் வாங்கக்கூடிய அதிகாரிகளுக்கும் மற்றவர்களுக்கும் இன்னும் கூடுதல் சலுகை கொடுத்தால் சௌகரியமாக இருக்கும்.

நம் நாட்டிலே மிகவும் ஏழ்மையாக இருக்கக்கூடிய மண்பாண்டத் தொழில்களுக்கு விற்பனை வரி வசூலிக்கிருர்கள். இந்த விற்பனை வரியை எடுத்துவிட வேண்டும் என்று கேட்டுக்கொண்டு எனக்கு இந்த சந்தர்ப்பத்தைக் கொடுத்த தலைவருக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

12 noon

* SRI S. NAGARAJA MONIGAR : கனம் சபாநயகர் அவர்களே, மக்கள் நமக்கு ஓட்டு அளித்து அனுப்பிய பின் கடைசி முறையாக இந்த பட்ஜெட்டின்மீது பேசுகிறேம். சென்ற பட்ஜெட் போதே சொன்னேன்: மிக உன்னதமான யானைமீது, வெற்றிகரமாக சர்க்கார் போய்க் கொண்டிருக்கிறது என்று உதாரணம் போல் சொன்னேன். இப்பொழுதும் சொல்ல விரும்புகிறேன். அந்த உன்னதமான யானையின் பேரில் காமராசர் என்ற சேவைத் தொண்டன் கோலாகலமாக மக்கள் உள்ளங்களில் பவனி வருகிருர்; மதியும், நிதியும் மேற்கொண்ட அமைச்சரவர்கள் நிதி இலாகாவை நடத்தி மக்களின் உள்ளங்களை கொள்ளைகொண்டு வருகிருர்கள். அப்படிச் சிறப்பு கொண்ட சர்க்காரும், அரசாங்க அதிகாரிகளும், சிப்பந்திகளும் திறமையாக நாம் முன்னேறி செல்ல பணிபுரிந்து, இந்த இந்திய நாட்டிலேயே இந்த சென்னை ராஜ்யமே முன்னணியில் நிற்கிறது என்ற வகையில் பணி புரிந்து சேவை செய்து வருகிருர்கள் என்று கூற விரும்புகிறேன். அவர்களைப் பாராட்டுகிறேன். இதிலே எதிர்க்கட்சிக்காரர்களும் சேர்ந்து பணி செய்திருக்கிருர்கள். ஏதோ ஒரு இடத்தில் சமீபத்தில் தங்களுடைய, தங்களுக்குள்ளே ஏற்பட்ட சர்ச்சை காரணமாக வேறு விதமாக இருக்கலாம் என்று கூடி பேசினுர்கள். கூடிப்பேசி வெளி வந்தார்கள். வெளியே ஏராளமான அபிமானிகள் தலைவர்கள் எப்படி வெளியே வருகிருர்களோ, சண்டை போட்டுக்கொண்டோ அல்லது வேறு விதமாகவோ என்று ஏக்கத்தோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். கடைசியில் தலைவர்கள் கைகோத்துக் கொண்டு வெளியில் வந்தபோது ஆனந்தமடைந்தார்கள் என்று பத்திரிகையில் படித்தோமல்லவா. இன்றையதினம் எதிர்க்கட்சிக் காரர்களும் வித்தியாசமின்றி சேர்ந்து திறமையாக வேலை செய்து இந்த 13 வருஷ காலமாக அரசு நடத்தி இப்பொழுது ஐந்து

[Sri S. Nagaraja Monigar] [6th March 1961

வருஷக் கடைசியில் வரி இல்லாமல் சிறப்பான பட்ஜட்டைக் கொடுத்திருக்கிறார்கள் என்று ஏகோபித்து பாஸ் செய்து சந்தோஷமாக நாம் அனைவரும் வந்தால் பொதுமக்கள் சந்தோஷமாக வரவேற்பார்கள் அல்லவா? வெளியிலே மக்கள் எப்படி இதையெல்லாம் வரவேற்கிறார்களோ அப்படியே எதிர் கட்சிக்காரர்களும் ஏன் இருக்கக்கூடாது என்று கேட்க விரும்புகிறேன். எல்லோரும் சேர்ந்தே ஒரு குடும்பம் போல் ஏன் இருக்கக் கூடாது என்று கேட்கிறேன். தேவையான அளவில் நாடு முன்னேற வேண்டும் என்று மட்டும் இருந்தால் அப்படி இருக்க வேண்டும். இல்லை பதவிக்காக, எப்படியாவது மந்திரிகள் ஆவதற்காக என்றால், அதைப் பற்றி நான் ஒன்றும் சொல்வதற்கில்லை.

எதிர்க்கட்சி மக்களிடத்திலும், மாணவர்களிடத்திலும், இங்கே சொல்லக்கூடாது அந்த வார்த்தையை, அந்த வார்த்தையை நான் சொல்லவில்லை. அந்த வார்த்தையை எதிர்கட்சிகள் பச்சையாக சொல்லி வாதாடினால் என்ன செய்வது. அம்மாதிரி சொல்லி, நிலைமையைக் கெடுக்கும் விதத்தில் ஆகிவிட்டது. இந்த பட்ஜெட்டில் வரியில்லையென்றால், மத்திய சர்க்கார் பட்ஜெட் வரியைப்பற்றி பேசி என்ன பலன். அங்கே இருக்கும் பார்லிமெண்ட் அங்கத்தினர்கள், சம்பத் முதலானவர்கள் ராஜிநாமா செய்து வெளியே வரவேண்டும். அதை விடுத்து, இந்த இடத்திலே வரி போடவில்லை. ஆதலால் இது ஒரு தேர்தல் பட்ஜட், இன்று இல்லையென்றால், அடுத்த மூன்று ஆண்டுகளில் கசக்கிப் பிழிவார்கள் என்றெல்லாம் எதிர்கட்சியைச் சேர்ந்த ஸ்ரீ. ராமசாமி முதலியார் சொன்னார்களே தவிர, திட்டமாக என்ன அவர் சொல்கிறார் வரிபோடச் சொல்கிறாரா வேண்டா மென்கிறாரா என்று பார்த்தால் ஒன்றுமே தெரியவில்லை. அதுவும் புரியவில்லை. இதிலே எதிர்க்கட்சி, கம்யூனிஸ்ட் சகோதரர்களேயோ, சோஷலிஸ்ட் சகோதரர்களேயோ, ப்ரஜா சோஷலிஸ்ட் சகோதரர் களேயோ, ஜனநாயக காங்கிரஸ்காரர்களேயோ பற்றி கொஞ்சம் நம்பிக்கை இருக்கிறது. அவர்களில் பலர் தேசீய விடுதலைக்காலத்தில், எங்களுடன் இருந்தவர்கள். கம்யூனிஸ்டுகள் இன்னும் மேலே உலக சமுதாயத்தையே விரும்புகிறார்கள். அவர்களுக்கும் எங்களுக்கும் வழிமுறைகளில்தான் வித்தியாசம். வேறு தாங்கல் இல்லை. உலக நாடுகள் ஒன்று சேர்ந்து பஞ்சசீலம் பேசும்போது பரந்த உலகத்தில் பரந்த எண்ணம் இன்றி குறுகிய எண்ணத்தோடு கருகிய நோக்குடையவர்களைப் பார்த்தால்தான் புரிந்து கொள்ள முடியவில்லை. மக்களெல்லாம் ஜாதி, இனம் இவற்றையெல்லாம் மறந்து ஒன்று பட்டுவரும் இந்நேரத்தில், இவர்கள் ஜாதி வேண்டும்; இனம் வேண்டும் என்றெல்லாம் சொல்வதும், மக்களை, குறிப்பாக மாணவர்களை சினிமா மேலும், காதல் மேலும் எதையாவது சொல்லி வாழ்க்கையே கெடுக்க செல்வது . . . . . . .

**SRI A. GOVINDASAMY :** பாயிண்ட் ஆப் ஆர்டர், ஸார். இந்த பட்ஜெட்டில் காதல் பற்றிப் பேசுகிறார்களே; என்ன சம்பந்தம்?

[6th March 1961

**MR. SPEAKER** பட்ஜட் பற்றிப் பேசுகிறுர். ஒழுங்கில்லை என்று எப்படிச் சொல்ல முடியும். அங்கத்தினர் பேசட்டும்.

**SRI S. NAGARAJA MONIGAR :** இவர்களின் தமிழில் காதல்தான் முக்கியமானது. இன்றைக்கு இந்த பட்ஜட்டை தேர்தல் பட்ஜட் என்று சொல்கிறுர்கள். அப்படியானல், இதை நேற்று இன்று வந்தவர்களா போட்டிருக்கிறுர்கள்? இதைக் கண்டா மக்கள் ஏமாந்து விடுவார்கள்? ஏமாந்து விட இன்றைக்கு வந்தவர்களல்லவே. இவர்களை 13 ஆண்டுகளாகப் பார்த்திருக் கிறுர்கள். தேர்தல் பிரசாரம் இன்றுதானு? 75 ஆண்டுகளுக்கு முன்பே, தேர்தல் பிரசாரம் சுதந்தரத்திற்காகச் செய்திருக்கிறேம். இதை செய்வார்களா, செய்யமாட்டார்களா என்பது மக்கள் அறிவார்கள். ஆகவே எதிர்க்கட்சிகள் சொல்வதையெல்லாம் மக்கள் கேட்க மாட்டார்கள், கேட்கவும் கூடாது.

ஒன்று சொல்ல விரும்புகிறேன். உலகத்தில் தென்னட்டு காந்தி என்றிருந்தோமே, இப்பொழுது என்ன இந்த காமராஜ் தென் ஞட்டு காந்தியாக விளங்குகிறுன் என்ற வயிற்றெரிச்சலோ என்னமோ, என்னவெல்லாமோ சொல்லிப் பார்க்கிறுர்கள். கனம் ஆசைத்தம்பி எங்களால்தான் காங்கிரஸுக்கு நன்மைகள் நடக் கின்றது என்கிறுர். தலை வணங்குகிறேம். மெத்த சந்தோஷம், தாராளமாகச் சொல்லுங்கள். கனம் கோதண்டராமன் சொல்கிறுர், 11 வயதுவரை இலவசக் கல்வி கொடுப்பதைப் புகழ்கிறேன் என்று. அது ஒன்று. கனம் சாரதி சொன்னர்கள் ஒரு கோச் பாக்டரியை வைத்துக் கொண்டு பெரிதாகச் சொல்கிறீர்களே என்று. இப்படி நன்மை செய்வதை மறந்து பேசியவர்கள் எப்பொழுதுமே இப்படி மறைத்து பேசமுடியாது என்பதை அறிந்து கொண்டார்கள். இன்னும் சில ஆண்டுகள் பொறுத்தால் எல்லா நன்மைகளையும் செய்ததாக ஒப்புக்கொள்ளச் செய்ய முடியும் என்பதைச் சொல்ல ஆசைப்படுகிறேன். ஆனல். இந்த நாட்டில் அக்கரை கொண்டவர் கள் எப்படிப் புகழ்கிறுர்கள். ஆட்லிப் பிரபு வந்தபோது, சென்னையை நான் மிகவும் விரும்புகிறேன் என்று சொன்னர்கள். இவர்கள் எல்லோருமே வந்திருந்தார்கள். இவர்கள் வந்திருந்த தற்கு மெத்த சந்தோஷப்படுகிறேன். முப்பது நாடுகளிலிருந்து நேருஜி அவர்களை வரவேண்டும் என்று கூப்பிடுகிறுர்கள். ஆயிரந்து நூற்று ஐம்பது தொழில்களில், ஆரம்பிக்கும்போது தென்னட்டில் 750, சென்னை ராஜ்யத்தில் இருக்கும். இதை அங்கத்தினர் கனம் வேதரத்னம் அவர்களும் சொன்னர்கள், பத்திரிகையிலும் வந்திருந்தது. மீதியிருக்கும் ராஜ்யங்கள் கேரளம், மைசூர். அங்கெல்லாம் குறைவாக இருக்கிறது என்று ஒரு வார்த்தைகூட இந்த திராவிட நாடு கோருகிறவர்கள் திராவிட நாட்டிற்காக முதலைக்கண்ணீர் விடுகிறவர்கள் சொல்லக் காணும்.

தமிழ் நாட்டில் இரும்புத் தொழிற்சாலையை சேலத்தில் சீக்கிரம் தொடங்கவேண்டும் என்றும், ரெயில் போடவேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளுகிறேன். சேலம் பெரிய ஜில்லா. பின்தங்கிய ஜில்லா. அங்கே ஒரு கல்லூரிதான் இருக்கிறது. இதை கல்வி அமைச்சர் நன்கு அறிவார். அங்கே இன்னெரு கல்லூரியை ஏற்

படுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதிலும் கால தாமதம் இல்லாமல் கவனிப்பார்கள் என்று பெருமிதம் அடைகிறேன். பதினொன்று வயது வரை இலவசக் கல்வி கொடுத்திருப்பதைப் பாராட்டுகிறேன். ஐம்பது ஆயிரம் ரூபாய் வரை வியாபாரிகளுக்கு சலுகை கொடுத்ததும், வியாபரிகளைக் கிளப்பி விட்டுக்கொண்டிருந்தவர்களுக்கு ஒரு அடியாக அமைந்தது. தமிழகம் என்ற பெயர் அறிவிக்கப்பட்டது. அந்த கோரிக்கையைக்கூட கதர் கட்டிய எங்களைச் சேர்ந்த ஒருவர்தான் தமிழரசு கழகம் நடத்தியது. அதில்கூட இவர்கள் கலந்து கொள்ளவில்லை. கலப்பதற்கு தயங்கினார்கள். ஏன் என்றால் அப்பா ஏற்கனவே சொல்லியிருக்கிறார்கள். தமிழ்நாடுதான் கிடைக்கும் என்று. வேறெந்த வெங்காய நாடும் கிடைக்காதென்று. இவர்கள் திராவிட நாடு கேட்பார்கள். ஆகவே இவர்களது நிலைமையை இவர்களே உணரவேண்டும்.

> " விடம்கொண்ட மீனைப்போலும் வெந்தழல் மெழுகுபோலும்
> படம்கொண்ட பாந்தாள்வாயில் பற்றியதே ரைபோலும்
> திடம்கொண்ட இராமபாணம் செருக்களத் துற்றபோது
> கடன்கொண்டார் நெஞ்சம்போலும் கலங்கினாள் இலங்கை
> வேந்தன்."

என்பது போல் இதெல்லாம் அவர்களுக்கு திடீர் திடீர் என்று விழும் அடிகள். தமிழகம் எனப்பெயர் கொடுத்துவிட்டார்கள். இது ஒரு அடி. பதினொருவது வகுப்புவரை இலவசக் கல்வி என்றார்கள். இது இரண்டாவது அடி. ஐம்பது ஆயிரம் ரூபாய் வரை வியாபாரிகளுக்கு வியாபார வரி விஷயத்தில் அனுகூலம் என்றார்கள். இது ஒரு அடி. இப்படி அவர்களுடைய மார்பில் திடீர் திடீர் என்று இராம பாணம் பாய்கிறது. அவர்களுக்குச் சொல்லுகிறேன், "ஆடிப் பிழைத்தாலும் பாடிப் பிழைத்தாலும் அன்பும் பண்பும் இல்லையடி" என்பது இவர்களுடைய பாட்டு. அன்பும் பண்பும் எங்கிருக்கின்றது. அன்பும் பண்பும் இல்லையடி என்றுதான் நான் சொல்ல விரும்புகிறேன். "பண்பும் அன்பும் இல்லை" என்று சொல்லும் வண்ணம் இருக்கக்கூடாது என்று சொல்லி என் உரையை முடிக்கிறேன்.

* **SRI P. S. SANTHANAM :** கனம் சட்ட மன்றத் தலைவர் அவர்களே, நமது கனம் நிதி அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கிற 1961-62-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையைப்பற்றி என்னுடைய கருத்துக்களைச் சொல்ல நான் ஆசைப்படுகிறேன். இந்த மாமன்றத்தில் கனம் அங்கத்தினர்கள் இது வரையிலும் பேசி வந்ததை நாம் கேட்டு வந்தோம். சிலர் கட்சி கண்ணோட்டத்துடன் தான் பேசி வந்தார்கள். ஆனால் நாங்கள் நல்ல எண்ணத்தோடு தான் பேசிக்கொண்டு வருகிறோம்.

(Deputy Speaker in the Chair.)

திராவிட முன்னேற்றக் கழகம் திராவிடத்தைப்பற்றிதான் பேசிக் கொண்டு வருகிறது. கேரளம், ஆந்திரம், கர்நாடகம், தமிழ் எல்லாவற்றையும் சேர்த்துத்தான் நாங்கள் பேசிக்கொண்டு வருகிறோம்.

6th March 1961]

எல்லோரும் சேர்ந்து இந்தப் பகுதியின் குறைகளை அகற்ற வேண்டும் என்றுதான் சொல்லி வருகிறோம். இங்குள்ள மக்கள் நல்ல வாழ்வு வாழ வேண்டும் என்றும்தான் சொல்லிக்கொண்டு வருகிறோம். எல்லா குறைகளையும் எடுத்துச்சொல்லி அந்தந்த வகையில் அவற்றிற்கு நிவர்த்தி காணவேண்டும் என்றுதான் இந்த மாமன்றத்தில் எடுத்துச் சொல்லிக்கொண்டு வருகிறோம். முதன் முதலாக மனிதனை நல்ல முறையில் வாழ வைக்க வேண்டும் என்பதுதான் எங்களுடைய கருத்து. "ஆடுவதும் பாடுவதும் ஆள் அடிமை செய்வதும் ஓடுவதும் தேடுவதும் ஞானதங்கமே ஒரு சாண் வயிற்றுக் கோடி." ஆடுவதும், பாடுவதும், ஓடுவதும் மனித னுடைய வாழ்க்கையைப் பெருக்குவதற்குத்தான் என்று பல பெரியோர்கள் பாடியிருக்கிறார்கள். அதற்கு ஏற்றவாறுதான் மக்கள் நல்ல வாழ்வு வாழ வேண்டும், அதற்கு வேண்டிய வழிவகை செய்யவேண்டும் என்று அரசாங்கத்தை வற்புறுத்திக் கொண்டிருக் கிறோம். மனிதனுக்கு வேண்டியது உண்ண உணவு, உடுக்க உடை, நிற்க நிழல். இந்த மூன்றும்தான் அவசியமாக வேண்டியிருக்கிறது. அதைக் கொடுக்க வேண்டும் என்றுதான் அதிலுள்ள குறைகளை எடுத்து சொல்லிக்கொண்டிருக்கிறோம். அதைச் சொல்லும்போது அதைத் தட்டிக் கழிக்காமல் அரசாங்கம் இருக்கவேண்டும் என்பதற்குத்தான் நாங்கள் கேட்டுக்கொண்டு வருகிறோம்.

இதே நேரத்தில் பட்ஜெட் அறிக்கையை படிக்கும்போது 1950-51-ல் 19·5 லட்சம் டன்களும் 1951-52-ல் 20;95 டன்களும் இப்படி அதிகப்படியாக உணவு உற்பத்தி பெருகிக்கொண்டு வந்திருக்கிறது என்றும் குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆனால், எவ்வளவு அதிகப்படி யாக உற்பத்தி செய்தாலும் எங்கு பார்த்தாலும் பட்டினியாகத் தான் இருக்கிறார்கள். எங்கு பார்த்தாலும் பஞ்சம்தான், எங்கு பார்த்தாலும் வறுமைதான். எத்தனையோ பேர்கள் பட்டினியால் செத்துப்போவதை நாம் பத்திரிகை வாயிலாகப் பார்க்கிறோம். (சிரிப்பு) (கனம் ஸ்ரீ சி. சுப்ரமணியம்: எந்தப் பத்திரிகையில் வந்திருக்கிறது என்று சொல்ல முடியுமா?) அப்படி எவ்வளவோ பத்திரிகையில் வெளி வந்திருக்கிறது. அதை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். உண்மையில் மனிதன் வறுமையால் பாதிக்கப் பட்டிருக்கிறான். எவ்வளவோ பேர்கள் வாடி வதங்கி இருக்கிறார் கள். விலைவாசிகள் எவ்வளவோ உயர்ந்து இருக்கிறது. நிலச் சுவான்தார்களைத் தவிர மற்றவர்கள் வறுமையால் பாதிக்கப் பட்டிருக்கிறார்கள். நிலச்சுவான்தார்கள், மிராசுதார்கள்தான் நல்ல வாழ்க்கையை நடத்திக் கொண்டு வருகிறார்கள். என்னைப்போலுள்ள ஏழை மக்கள்தான், பாமர மக்கள்தான் பட்டினி கிடந்து உணவு இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள். அவர்களைப் பார்த்தால் முன்பு இருந்ததைப்போல் இப் பொழுது இல்லை. அந்த நிலைமை அங்குள்ள பாமர மக்களுக் குத்தான் நன்றாகத் தெரியும். மிராசுதார்களுக்கும், நிலச்சொந்த காரர்களுக்கும் அவ்வளவாகத் தெரியாது.

[6th March 1961

**THE HON. SRI C. SUBRAMANIAM :** கனம் அங்கத்தினர் ஐந்து வருஷங்களுக்கு முன் இருந்ததைப்போலவேதான் இப்பொழுதும் இருக்கிறார், எந்தவிதமான மாறுதலையும் காண முடியவில்லை. அவருடைய உருவம் எந்த விதத்திலாவது மாறிய தாகத் தெரியவில்லை.

SRI P. S. SANTHANAM : பாமர மக்கள் அப்படி உரு மாறியிருக்கிறார்கள் என்று சொல்லுகிறேன். நிறைய உற் பத்தி செய்யப்படுகிறது என்று சொல்லுகிறார்களே தவிர விலை வாசிகள் குறையவே இல்லை.

உரத்தை எடுத்துக்கொண்டால் விஞ்ஞான முறையில் தயா ரிக்கப்படுகிற சல்பேட் முதலிய உரம் கிடைக்கவில்லை. சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன்னதாக பயிர் செய்வதற்கு தழை உரங்களையும், கம்போடியா உரத்தையும் கொடுத்துக்கொண்டு வந்தோம். ஆனால் இப்பொழுது தழை உரம் விவசாயிகளுக்குக் கிடைக்கவில்லை. அதிலும் ஏழை விவசாயிகளுக்குக் கிடைக்க வில்லை. அவர்களுக்குக் கிடைக்கும்படி வழி செய்யவேண்டும். இன்றைக்கு காடு வளர்க்கிறார்கள் என்று சொல்லுகிறார்கள். காட்டில் மரங்களை வளர்க்கிறார்கள். ஆனால் கிராமங்களில் சென்று பார்த்தால் காடுகளிலிருந்து தழை உரம் கிடைப்ப தாகவே இல்லை. அப்படி தழை, உரம் கிடைத்தாலும், அது ஏழை பாமர மக்களுக்குக் கிடைப்பதில்லை. அங்குள்ள பணக்காரர்கள்தான் வாங்கிக்கொள்ளுகிறார்கள். ஏழை பாமர மக்களுக்குக் கிடைக்கும்படியாகச் செய்தால் நலமாக இருக்கும். அப்படி காடுகளில் போய் ஏழை விவசாயிகள் தழை உரங்களைக் கொண்டு வரவேண்டும் என்று நினைத்தாலும் அதற்கு சர்க்கார் தடை விதிக்கிறார்கள். ஏனென்றால் காடுகளுக்குச் சென்று தழை களை வெட்டுகிறோம் என்று மரங்களை வெட்டிவிடுகிறார்கள் என்று தடை விதிக்கிறார்கள். ஆகவே ஏழை விவசாயி களுக்குக் கிடைக்கும் அளவில் தழை உரங்களை வளர்க்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். அப்படி உற்பத்தி செய்து விவசாயிகளுக்குக் கொடுத்தால் உண்மையிலேயே விவ சாயத்தை அதிகப்படியாக உற்பத்தி செய்வதற்கு ஏதுவாக இருக்கும்.

அதே நேரத்தில் இன்றைக்குப் பார்த்தால் காட்டு வளர்ப்பை பஞ்சாயத்துக்கே கொடுக்கப் போகிறார்கள். இது எப்படி இருக் கிறது என்றால், எலியை வளர்த்து பூனை கையில் கொடுப்பது போல் இருக்கிறது. இதற்கு முன் சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன் காடுகள் எல்லாம் பஞ்சாயத்தினிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தன. அதனால் காடுகள் எல்லாம் தரை மட்டமாக்கப்பட்டு விட்டன. மீண்டும் அதைப்போலவே பஞ்சாயத்துக்களிடம் காடுகளை ஒப் படைத்தால் காடுகள் எல்லாம் தரை மட்டமாகி விடும். ஆகவே பஞ்சாயத்துக்களுக்கு மறுபடியும் காட்டிலாகாவைக் கொடுக்கக் கூடாது என்று மாமன்றத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக நீர்ப்பாசனத்தை எடுத்துக்கொண்டால் இன் றைக்கு சென்னையில் சுமார் 18 ஆயிரம் கிராமங்கள் இருக்கின்றன. சிறிய நீர்பாசனம் செய்யக்கூடிய குளங்கள் இந்த ராஜ்யத்தில்

6th March 1961] [Sri P. S. Santhanam]

சுமார் 27 ஆயிரம் இருக்கின்றன. அவைகள் எல்லாம் செப்பனிட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது; 200 ஏக்கருக்குக் குறைவாக ஆயக்கட்டு உள்ள ஏரி, குளங்களை பஞ்சாயத்து யூனியன்களிடம் ஒப்படைக்கப்போவதாகச் சொல்லப்படுகிறது. இன்றைக்குப் பார்த்தால் பஞ்சாயத்து நிர்வாகத்தை எடுத்துக்கொண்டால் பஞ்சாயத்து தலைவர்களாக வரக்கூடியவர்களும் பஞ்சாயத்து யூனியன் சேர்மனாக வரக்கூடியவர்களும் நல்ல முறையில் நடந்துகொள்வதாகத் தெரியவில்லை. அந்த நிர்வாகத்தில் எவ்வளவோ ஊழல்கள் இருக்கின்றன. பலர் பஞ்சாயத்து பணத்தை கையாடல் செய்து வருகிறார்கள். சுமார் மூன்று நான்கு மாதங்களுக்கு முன்னதாக என்னுடைய பகுதியில் கீழநாச்சூப்பட்டு என்ற கிராம பஞ்சாயத்துத் தலைவர் சுமார் நாலாயிரம் ரூபாய் வரையில் கையாடல் செய்துவிட்டார். அதைப்பற்றி மூன்று மாதகாலமாக இந்த சட்ட மன்றத்திலும் அந்த நிர்வாக அமைச்சருக்கும் தந்தி மூலமாகவும், தபால் மூலமாகவும், ரிஜிஸ்தர் மூலமாகவும் தகவல் அனுப்பி இருந்தும், ஏழை மக்களுடைய பணத்தை, அதிலும் 100 ரூபாய் மதிப்புக்கு ஒரு அணா வீதம் வரி வசூல் செய்த பணத்தை, கையாடல் செய்திருக்கிறார் என்று புகார் செய்திருந்தும் அதைப்பற்றி கேட்பதற்கு யாரும் இல்லை. எந்தவிதமான நடவடிக்கையும் இது வரையிலும் எடுத்துக்கொண்டதாகத் தெரியவில்லை. அந்த நிர்வாகத்தில் அவ்வளவு ஊழல்கள் இருக்கின்றன.

THE HON. SRI C. SUBRAMANIAM: எல்லா பஞ்சாயத்து தலைவர்கள் மீதும் சேர்மன்கள் மீதும் அப்படி குற்றம் சாட்டுகிறார்களா என்பதைக் கேட்க விரும்புகிறேன். தயவு செய்து மற்ற பஞ்சாயத்து தலைவர்களைப்பற்றி பேசும்போது கொஞ்சம் நேர்மையாகவும் ஜாக்கிரதையாகவும் பேச வேண்டும். ஏதோ ஒரு பஞ்சாயத்து தலைவர் தவறாக நடந்து கொண்டு விட்டால் எல்லா பஞ்சாயத்து தலைவர்களைப்பற்றியும் குற்றம் சொல்லக் கூடாது. அப்படிச் சொல்வது இந்த சபைக்கு அழகல்ல என்பதை மட்டும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

SRI P. S. SANTHANAM: நான் சொல்லும்போது ஒரு குறிப்பிட்ட பஞ்சாயத்து தலைவரைப்பற்றிதான் குறிப்பிட்டேன். அவர் இருக்கக்கூடிய கிராமத்தின் பெயரையும் சொல்லி இருக்கிறேன். ஆகவே அவர் பேரில் இது வரையிலும் எந்த விதமான நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளவில்லை. இந்த நிலைமை நீடித்துக்கொண்டிருந்தால் பஞ்சாயத்து நிர்வாகம் பெரிய அளவில் பாதிக்கப்படும் என்பதைப்பற்றி உண்மையிலேயே இந்த மாமன்றத்தில் கூற விரும்புகிறேன்.

விவசாயத்துறையில் கரும்பு சாகுபடி நல்ல முறையில் சாகுபடி செய்யப்படுகிறது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். அடுத்த திட்ட காலத்தில் அடுத்த ஆண்டு மேலும் பத்து லட்சம் டன் அதிகப்படியாக கரும்பு உற்பத்தி செய்யப் படவேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். கேள்வி நேரத்தில் சர்க்கரையை வெளி நாட்டில் இறக்குமதி ஏற்றுமதி செய்வதைப்பற்றி கேட்கப்பட்டது. கரும்பு அதிகப்படியாக உற்பத்தி செய்யப்படுகிறது என்று சொல்லி

[Sri P. S. Santhanam] [6th March 1961

யும் சில சமயம் சர்க்கரை பற்றுக்குறை ஏற்படுகிறது. இந்த நிலையில் திருவண்ணாமலையில் ஒரு சர்க்கரை ஆலையை அமைக்க வேண்டும் என்று சுமார் 12 ஆண்டுகாலமாக கேட்டுக்கொண்டு வரப் பட்டும் இதுவரையிலும் அங்கே ஏற்படவில்லை. ஒரு சமயம் அங்கு ஒரு சர்க்கரை ஆலை வரும் தருவாயில் இருந்தும் கூட பிறகு அது வராமல் தாமதப்பட்டு விட்டது. அதன் காரணம் என்ன என்று தெரியவில்லை. ஆகவே அங்கு ஒரு சர்க்கரை ஆலையை ஆரம்பித்து கரும்பு உற்பத்தியை கூட்டுறவு சொசைட்டிக்குக் கொடுத்தால் சர்க்கரை உற்பத்தியை அதிகரிக்கலாம். ஏராளமாக வரக்கூடிய நிலைமை ஏற்படும், அதற்கு சர்க்கார் வழிவகை செய்யவேண்டும். (மணி அடிக்கப்பட்டு பேச்சு முடிவுற்றது).

* Sri M. A. MUTHIAH CHETTIAR: கனம் உதவிசபா நாயகர் அவர்களே, நமது அரசாங்கத்தினுடைய நிதி நிலை அறிக்கையைப்பற்றி எல்லோரும் பாராட்டியிருக்கிறார்கள். அதுவும் இந்த வருடம் நமது நிதி அமைச்சர் அவர்கள் பத்துவருட காலமாக ஏற்பட்டுள்ள சாதனைகளைப் பற்றியும் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களின் பொருளாதார நிலைமையைப் பற்றியும் குறிப்பாகவும், தெளிவாகவும் எடுத்து விளக்கியிருக்கிறார்கள். இவ்வாண்டு நிதி நிலை அறிக்கையில் பத்துவருஷ அபிவிருத்திகளை யும், முன்னேற்றங்களையும் ஒருசேர தொகுத்துச் சொல்லியிருப்ப தற்காக அவரைப் பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம். அதற் காக அவர் எடுத்துக்கொண்டிருக்கிற முயற்சியையும் பாராட்ட வேண்டும். வரும் ஐந்து வருஷத் திட்டத்தைப்பற்றியும் குறிப் பாகச் சொல்லியிருக்கிறார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத் திற்காக நமக்கு 291 கோடி ரூபாய் ஒதுக்கியிருப்பதாகவும், சொல்லி யிருப்பது பெருமைப்படத்தக்கதாகும். டெல்லியில் நமக்கு 291 கோடி ரூபாய் ஒதுக்கியிருப்பதோடு இன்னும் வருங்காலத்தில் ஏதாவது புதுத் திட்டம் சொன்னாலும் அவற்றையும் நிறைவேற்ற உதவி அளிப்பதாகச் சொன்னார்களே அதுதான் மிகவும் பாராட் டத்தக்கது. நமக்குப் பெருமை அளிப்பது, விவரமாகப் பேச நேரம் இல்லாததால் சுருக்கமாகச் சிலவற்றைச் சொல்ல ஆசைப் படுகிறேன்.

கல்வி விஷயத்தில் 11-வது வரையில் இலவசக் கல்வி அளித்திருப் பதைப் பாராட்டுகிறேன். ப்ரீ யுனிவர்ஸிடியை ஏற்படுத்தியதே தவறு என்று அமைச்சர் கருதுவது போல நானும் கருதுகிறேன். அதுவிஷயம் நம் கையில் இல்லை. முன்பே சொன்னோம். சர்வகலா சாலைகள் அதைச் செய்துவிட்டன. ஆனால் நமது மந்திரி கையில் ஒன்று இருக்கிறது. பிரீ யுனிவர்ஸிடியும், இதர 3 வருஷ கல்லூரிப் படிப்பும் கல்லூரியிலேயே இருக்கும்படித்தான் செய்யவேண்டும். நான்கு வருஷமாவது கல்லூரியில் படித்தால்தான் நல்லது. அதை விட்டு ப்ரி யுனிவர்ஸிடியைப் பள்ளிக்கூடத்திற்குக் கொண்டுவந்து விட்டால் எல்லாம் அடியோடு போய்விடும். கல்வியின் தரம் மிக மட்டமாக ஆகிவிடும். ஆகவே ப்ரி யுனிவர்ஸிடி படிப்பைப் பள்ளிக் குக்கொண்டுவராதபடி அமைச்சர் அவர்கள் கவனித்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

6th March 1961] [Sri M. A. Muthiah Chettiar]

இன்னொன்று. நான் நேற்று தஞ்சை போயிருந்தேன். அங்கே உள்ள சரஸ்வதி மகால், சங்கித மகால் இவையெல்லாம் நம் நாட்டுப் பொக்கிஷங்கள். சங்கீத மகாலில் மைக் இல்லாமலேயே பேசலாம். எல்லோருக்கும் நன்றாகக் கேட்கும். கனம் பக்தவத்சலம் அவர்கள் கூடச் சொன்னார்கள், எந்த மூலையில் உட்கார்ந்து வீணை வாசித் தாலும் எல்லா இடங்களிலும் கணீரென்று கேட்கும் என்று. ஸ்ரீ டி. கே. பழனியப்பன் கலெக்டராக இருந்தபோது அவற்றை யெல்லாம் நல்லமுறையில் சீர்படுத்தியிருக்கிறார். இன்னும் நாம் எத்தனையோ வளர்ச்சிபெறச் செய்ய வேண்டியிருக்கிறது. சரஸ்வதி மகால் லைப்ரரியில் இப்போது புதிதாக ஏட்டுச்சுவடி சேகரிக்கும் வேலையில் ஈடுபட முடியவில்லை என்று கேள்விப்பட்டேன். அவற்றை நல்லமுறையில் ஒரு கல்சரல் சென்டராக வைத்துக்கொள்ள வேண்டும். அது பெரிய சொத்து. நமக்கு 50 ஆயிரம், லட்சம் என்பது எல்லாம் பிரமாதமில்லை. திருமலை நாயகன் மகாலும் அப்படித்தான். . . கோர்ட்டை வைத்து சீரழிக்கிறார்கள், அதை வேறு இடத்திற்கு மாற்றவேண்டும். இரண்டாண்டுக்கு முன்பு அசெம்பளியை ஊட்டிக்குக் கொண்டு சென்றோம். அதுபோல இவ்வாண்டு நமது சட்டசபைக் கூட்டத்தை தஞ்சை சரஸ்வதி மகால் மண்டபத்தில் நடத்துவதற்கு ஏற்பாடு செய்தால் மிகவும் நன்றாக இருக்கும். எல்லா சட்டசபை அங்கத்தினர்களும் அங்கே சென்று பார்க்க வேண்டியவைகள் அநேகம் இருக்கின்றன. இதற்காகச் செலவானாலும்கூடப் பரவாயில்லை என்பதை கனம் அமைச்சர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அங்கே நான் இருந்தது 20 நிமிஷம்தான். இன்னும் எவ்வளவோ அற்புதங்கள் அங்கே இருக்கின்றன. அந்தச் செல்வங்களை நல்ல முறையில் பேணிக் காப்பாற்ற வேண்டியது நம் பொறுப்பு. இதை அமைச்சர் அவர்களும் ஒத்துக் கொள்வார்கள் என்பதில் ஐய மில்லை. இந்த சட்டசபைக் கூட்டத்தை அங்கே வைக்கவும் ஒப்புக்கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

நீர்ப்பாசனம் சம்பந்தமாக நான் கேரளாவோடு கட்சி பேச வேண்டும் என்று சொல்லவில்லை. நம் ராஜ்யத் திட்டங்களை எல்லாம் நிறைவேற்றி விட்டோம். கேரள முதல் அமைச்சர் பட்டம் தாணுப் பிள்ளை, கடலில் கலந்தாலும் கலக்கட்டும் இதற்கு ஒரு சொட்டுக் கூடத் தரமாட்டோம் என்று சொல்லலாம். எல்லாம் 1½ வருஷம் தான். அவர் சொல்லிக்கொண்டிருந்துவிட்டு போகட்டும். அதற் காக நாம் அதைப்பற்றிய ஆராய்ச்சி, முயற்சி எதையும் கைவிட்டு விட வேண்டாம். அப்பர், பெரியார், வைகை என்று ஒவ்வொன்றாக அடக்கி எல்லாத் திட்டத்தையும் வெற்றிகரமாகச் செய்யவேண்டும். வெல் இர்ரிகேஷனைப் பொறுத்தவரையிலும்—இன்னும் ராமநாத புரம் ஜில்லாவில் அதிக அளவு கிணறுகள், ட்யூப் வெல்ஸ் எல்லாம் ஏற்படுத்தவேண்டும். இந்த நீர்ப்பாசனத்தோடு கால்நடைகளைப் பற்றியும் சொல்லவேண்டும். அந்த இலாகா நல்லமுறையில் வேலை செய்து வருவதற்காகப் பாராட்டவேண்டும். வெட்டர்னரி ரிசர்ச் போதாது. மெட்ராசில் மட்டும் ஒரு காலேஜ் இருந்து பயன் இல்லை. கோயமுத்தூர் பகுதியில் ஒன்றும், ராமநாதபுரம், மதுரை,

திருச்சி பகுதியில் ஒன்றும் என இன்னும் இரண்டாவது ஏற்பட வேண்டும். வெட்டர்னரி காலேஜோடு, வெட்டர்னரி ரிசர்ச் அதிகப் படவேண்டும்.

நம் ராஜ்யத்தில் ஏற்பட்டுள்ள தொழில் அபிவிருத்திக்காக தொழில் மந்திரியையும் நிதி மந்திரியையும் பாராட்டவேண்டும். பல பெரிய பெரிய தொழில்கள் எல்லாம் இங்கே ஏற்பட்டிருக் கிறது என்றால் அதற்குக் காரணம் அவர்களுடைய பெரு முயற்சி யேதான். இன்னொன்று. நெய்வேலியைப்பற்றி நாம் கவனிப்பதே இல்லை என்பதை வருத்தத்தோடு தெரிவித்துக்கொள்கிறேன். நான் ஏதோ ஆயாசத்தோடு சொல்வதாக நினைக்கக்கூடாது. நெய் வேலி நம் ராஜ்யத்தில் இருக்கிறது. அதன் அட்மினிஸ்ட்ரேஷனில் நமக்கும் பங்குண்டு. ஆனால் நமது மந்திரிகள் அதைப்பற்றிக் கவலைப்படுவதே இல்லை. நெய்வேலி எங்கோ இருக்கும் வேலியைப் போல நினைக்கிறார்கள். அந்தப் பக்கம் எத்தனையோ கல்லூரிகள் இருக்கின்றன. மாணவர்கள் யாரும் ரிசர்ச்சுக்காகக்கூட அனுமதிக்கப்படுவதில்லை. ட்ரெயினிங் சென்டர் இல்லாமல் இருக்கலாம். பார்க்கக்கூட அனுமதி கிடையாது. அது என்ன வேலி. (ஸ்ரீ ஏ. கோவிந்தசாமி: நமக்கெல்லாம் அது முள் வேலி) முள் வேலியாக இருந்தால்கூட அதை அகற்றிப் போகலாம். மின்சார வேலியாக இருக்கிறது. இனிமேலாவது இத்தகைய நிலை இல்லாதவாறு--நமது அமைச்சர் அவர்கள் அத்திட்டத்தில் அதிக கவனம், அதிக ஊக்கம், நெருங்கிய தொடர்பு கொண்டு அதை நிறைவேற்றவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

பவரைப்பற்றி பேசவேண்டும். உண்மையில் மின்சாரத் துறையில் குந்தா போன்ற பெரிய திட்டங்களை நிறைவேற்றி முன்னேறியிருக்கிறோம். ஹைட்ரோ ப்ளான்ட் முடிவு அடைந்து விட்டது. தர்மல் ப்ளான்ட் வேண்டும். வெளியாரின் உதவியோ டாவது இன்னும் இரண்டு தர்மல் ப்ளான்ட் ஏற்படுத்தி க்ரிட்டோடு இணைத்தால்தான் நல்லது. பத்து வருஷம், பதினைந்து வருஷம் என்று வெளிநாட்டாருக்கு லீசுக்காவது கொடுத்து அவர்களே ஏற்படுத்தலாம் என்றாவது சொல்லவேண்டும்.

ரெயில்வே லைனைப்பற்றி சொல்லிக்கொண்டே இருக்கிறோம். டெபுடி மினிஸ்டர் போய் 4 வருஷம் ஆகிறது. ஒன்றும் கிடையாது. பரமக்குடி, மணியாச்சி, பங்களூர், சாம்ராட் லைன், சேலம்; பங்களூர் என்று இப்படி சொல்லிக்கொண்டே இருக்கிறோம். ஒன்றும் நடக்கவில்லை. அவற்றையும் துரிதப்படுத்த வேண்டும்.

அதேபோன்று சென்னை ஹார்பருக்காக அதன் விஸ்தரிப்புக்கு 86 ஏக்கரா கொடுத்தோம் என்று சொல்கிறார்கள். சென்னை ஹார்பர் விஸ்தரிப்புக்கு என்று இவர்கள் இந்த இயற்கையான கடற்கரையைக் கொடுத்தது தவறானது என்று சொல்வேன். கடலிலேயே 5 மைல் தள்ளித்தான் கப்பல்கள் நின்று இருக் கின்றன. அதுவும் சென்னைத் துறைமுகம் 1805-ல்தான் ஏற் பட்டது. இப்பொழுதே இரும்பு பாலம் வரையில் தெற்கே விஸ்தரிக்கப்பட்டுவிட்டது. இனி தெற்கே போகக்கூடாது.

6th March 1961] [Sri M. A. Muthiah Chettiar]

முன்பே இதைப்பற்றி ஆட்சேபனை செய்தேன். அப்போது பணம் இல்லை, நான் சொன்னதைக் கேட்டார்கள். இப்போது பணம் ஏராளம் இருக்கிறது. இதனால் இஷ்டப்படி போகிறார்கள். இனி யாவது இரண்டாவது கட்டம், மூன்றாவது கட்டம் என்று எடுத்துக்கொள்ளும்போது ராயபுரத்திற்கு வடக்கே இந்த அபிவிருத்திகளைச் செய்துகொண்டே போகவேண்டும். எனக்குத் தெரிந்து இங்கே பல சேரிகள் அழிந்துவிட்டன. ஒரு சேரி அழிந்தது எனக்கே தெரியும்.

தூத்துக்குடி துறைமுகத்தைப்பற்றிச் சொன்னதையும் பாராட்டுகிறேன். தூத்துக்குடி துறைமுகம் அபிவிருத்தி அடைந்தால்தான் சேதுசமுத்திரத் திட்டம் அபிவிருத்தியாகும்.

நான்கைந்து நாட்களுக்கு முன்பு பத்திரிகையில் பார்த்தேன். ஈஸ்டர்ன் ஷிப்பிங் கம்பெனிக்கு கப்பல் விடுகிற அனுமதி அங்கே கொடுக்கப்போவதாக தெரிகிறது. இன்னும் 2 வருஷம் கழித்துத் தான் அவர்கள் கப்பல் விடப்போகிறார்கள். ஆனால் அதற்குள் இப்போதே அங்கு போக்குவரத்து தடை செய்யப்பட்டுவிடும். ஒவ்வொரு நாளும் வடநாட்டு யாத்திரிகர்களும் சரி தென்னாட்டு யாத்திரிகர்களும் சரி சேதுசமுத்திர ஸ்னானத்திற்காகத்தான் இராமேசுவரம் போகிறார்கள். ஸ்டேஷனுக்குச் சென்று பார்த்தால் தெரியும், நமது ராஜ்யத்திற்கு தினந்தோறும் எவ்வளவு பேர்கள், வட இந்தியாவிலிருந்து வருகிறார்கள் என்பது. ஆகவே, இந்த 15 லட்சம் ரூபாயை நம் சர்க்காரே கொடுக்கவேண்டும். பின்னர், கோயில்களைப்பற்றி சிலருக்கு அக்கறையில்லாதிருக்கலாம். ஆனால் பலருக்கு அக்கறையிருக்கிறது, மந்திரிசபைக்கும் அக்கறையிருக்கிறது. ஆகவே, இதை "ஈஸ்டர்ன் ஷிப்பிங் கார்ப்பரேஷனுக்கு" கொடுக்கக்கூடாது, அதுபற்றி ஆலோசனை செய்யவேண்டியிருக்கிறது என்று இச்சர்க்கார் மத்திய சர்க்காருக்கு எழுத வேண்டும். பத்து நாட்களுக்குள் அதை ஒப்புவிக்கப் போகிறார்கள். ஆகவே, சீக்கிரமாக எழுத வேண்டும். ஆகவே, சேதுசமுத்திரத்தில் ஸ்நானம் செய்யவேண்டிய வசதிகள் செய்து கொடுக்கப்பட வேண்டும்.

12-30 p.m.

அடுத்தபடியாக தஞ்சாவூர் ராஜகோபுரத்தைப் பார்க்க அக்கோவிலிலுள்ள ஹிந்துக்களைத் தவிர வேறு யாரும் போகக் கூடாது என்றிருக்கிறதாம். பூட்ஸை அகற்றிவிட்டுக்கூட வெள்ளைக்காரன் போகக்கூடாதாம். அங்கு நிறைய பெயின்டிங்க்ஸ் இருக்கின்றன. இதுபற்றிய ஒரு ரெஸல்யூஷன்கூட போடப்பட்டிருக்கிறதாம். ஆகவே, அதுபற்றியும் கவனிக்கவேண்டும்.

அடுத்தபடியாக, ஹௌஸிங் விஷயம். நகரில் ஸி.ஐ.டி, இருக்கிறது, அதில் நானும் ஒரு மெம்பர்தான். பல இடங்கள் இப்பொழுது அதனால் வாங்கப்படுவதால் விலை ஏறிவிட்டது. ஒன்றை அமைச்சர் வெங்கட்ராமன் அவர்கள் விளக்கமாக சொல்ல வேண்டும். சென்னை நகருக்குள் இடங்கள் எடுக்கப்போவதில்லை, வெளியில்தான் எடுக்கப்போகிறோம் என்று கூறியிருக்கிறார்கள். அதுபற்றி விளக்கமாக கூறவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். சென்னைக்கு சிறிது மைல் தொலைவில் "ஸாட்டலைட்ஸ்

[Sri M. A. Muthiah Chettiar] [6th March 1961

டௌன்ஸ்" ஏற்படுத்த வேண்டும். ஷெனுய் நகருக்கு மேற்கே ஏற்படுத்தப் போகிருர்கள். பூந்தமல்லியில் ஒரு டவுன் ஏற்படுத்த வேண்டும். ஸி.ஐ.டி.-யில் கவர்ன்மெண்ட் உத்தியோகஸ்தர்களுக்குத் தான் கொடுக்க முடிகிறது. மற்றவர்களுக்கு அதிகமாக கொடுக்க முடிவதில்லே. பூந்தமல்லிக்கும் செண்ட் தாமஸ் மவுண்ட்-க்கும் நடுவில் இடம் இருக்கிறது. அங்கு ஒரு 3,000 ஏக்கர் எடுத்து ஒரு டவுன் அமைக்கவேண்டும். பின்னர், லோன் பாலிஸிபற்றி அமைச்சர் அவர்கள் கூறியிருக்கிருர்கள். சென்னே சர்க்கார் வெளியிட்ட லோன்கள் இதுவரை கீர்த்தியோடு நடந்திருக்கிறது. ஆனல் அடுத்த லோன் அப்படி கீர்த்தியோடு நடக்காது என்று எச்சரிக்க விரும்புகிறேன். இது அவர்களுக்கும் தெரியும். ஆகவேதான் அது பற்றி ஜாடையாக, சொல்லப்பட்டிருக்கிறது. காரணம், ரிசர்வ் பாங்கின் பைனன்ஷியல் பாலிஸி தவருயிருக்கிறது. 12-ம் தேதி பாங்கர்ஸ் கான்பரன்ஸ் நடக்கயிருக்கிறது. ரிசர்வ் பாங்கின் பைனன்ஷியல் பாலிஸியை மாற்றச் சொல்லவேண்டும், அமைச்சர் அவர்கள். இப்பொழுதுள்ள மார்க்கட்படி மூன்று, நான்கு கோடி ரூபாய்கூட வராது. தாசில்தார்களே, ரெவின்யூ இன்ஸ்பெக்டரை அழைத்துச் சென்று வசூல் செய்கிருர்கள் என்று எதிர்கட்சிக் காரர்களின் ஆட்சேபனேக்காக நிறுத்திவிட்டார்கள். இப்பொழுது பைனன்ஷியல் மார்க்கட் மாறியிருக்கிறது. நம் நிதியமைச்சர் அவர்கள் சொன்னல் அவர்கள் கட்டாயம் கேட்பார்கள். நமது நிதியமைச்சர் அவர்கள் நிதி விஷயத்தில் நல்ல அனுபவம் பெற்ற வர்கள். ஆக, ரிசர்வ் பாங்கின், கவர்ன்மெண்ட் ஆப் இந்தியாவின் பைனன்ஷியல் பாலிஸியை மாற்றினுலொழிய, 200 கோடி கொடுத் தால்தான் மார்க்கட் சிர்படும். அப்பொழுதுதான் செப்டம்பரில் லோன் கிடைக்கும். அமைச்சர் அவர்களுக்கு தெரியாததை நான் சொல்லவில்லே. இதை அழுத்தந் திருத்தமாக சொல்வதற்கே சொல்கிறேன். ஆக, நம் நாட்டின் நிலேயை உயர்த்திக்கொண்டு வருவதற்காக பாடுபடும் நிதியமைச்சர் அவர்களேயும் சர்க்காரை யும் பாராட்டிக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

* Sri R. CHIDAMBARA BHARATHI : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த நிதிநிலே அறிக்கையை பூர்ணமாக வரவேற்று நான் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். ஜனநாயகப் பண்பில் ஊறிப்போன காங்கிரஸ் ஸ்தாபனத்தின்மீது எழுந்த காங்கிரஸ் சர்க்கார் மக்களிடம் பூர்ண நம்பிக்கை வைத்ததின் காரணமாக முதல் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களே வெற்றிகா மாக நிறைவேற்றிவிட்டு, மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தை ஆரம்பிக்கயிருக்கிறபடியாலும், தேர்தலுக்கு முந்திய காலமாக யிருக்கிறபடியாலும் மக்களுக்கும், மக்கள் சார்பில் இந்த சபைக் கும் செலுத்தவேண்டிய கடமையை நன்கு ஆற்றியிருக்கிருர்கள். அப்படி ஆற்றும் வகையில் 60 பக்கங்களும், ஒன்ருேடொன்று இணைக்கப்பட்ட 44 விஷய கோரிக்கையோடு இந்த நிதிநிலே அறிக் கையை சமர்ப்பித்திருப்பதற்காக நான் நிதியமைச்சர் அவர் களுக்கும், இந்த சர்க்காருக்கும் எனது வாழ்த்துக்களேயும் நன்றி யையும் தெரிவித்துக்கொள்கிறேன். ஜனநாயக பண்பிலே பழக்க மில்லாதது மட்டுமல்ல ஜனநாயகம் இங்கு ஏற்படுமானல்

6th March 1961] [Sri R. Chidambara Bharathi]

நமது சொந்த நலன்கள் பாதிக்கப்படுமே என்று ஆங்கில சர்க்காரை பல ஆண்டு காலமாக அடி வருடிக்கொண்டிருந்த ஒரு கூட்டத்தார் இதை எதிர்க்கலாம். ஜனநாயக பண்பு நீடித்திருக்க செயல் படுகிற உணர்ச்சி மேலோங்கியதால் அதிலிருந்து விலகியவர்கள் இந்த அறிக்கையை எதிர்க்கலாம். மற்றவர்கள் இந்த அறிக்கையை எதிர்ப்பதற்கு எந்தவித காரணமும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. அதுமட்டுமல்ல, சுதந்திரம் அடைவதற்கு முன்பாக தமிழ் நாட்டைச் சுற்றிப்பார்த்த எந்தத் தமிழனும் இன்றைய தினம் சுற்றி வந்தால் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் முடிவடைந்திருக்கும் இத்தருணத்தில் நகரங்கள்தோறும் புதுப் புதுக் கட்டிடங்களும், புதுப் புதுக் கலாசாலைகளும், மேற்கொண்டு உல்லாசப் பயணம் செய்யும் விதத்தில் அதற்கேற்ற ஸ்தலங்கள், நீர் தேக்கங்கள் இவைகள் எல்லாம் ஏற்பட்டிருப்பது மட்டுமல்ல, இன்றையதினம் சோம்பேறியாக இருக்கக்கூடிய யாராவது பட்டினியாகயிருக்கலாம். ஆனால் செயல் புரிய மனம் உள்ளவர்கள் பட்டினியாகயிருக்கிறார்களா என்றால் அவர்கள் நாடகத்தில் நடிப்பதுபோன்று கூறுவதற்கு ஒப்பாகுமே அல்லாது உண்மையை சொல்லுவதாக மக்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். இன்றைய தினம் கிராமங்களுக்கு சென்று பார்த்தால், 13 ஆண்டுகளுக்கு முன்னால் விவசாய வேலைக்கு 4 அணா கிடைத்துக்கொண்டிருந்த போது, இன்று 2 ரூபாய் கொடுத்தாலும் ஆள் கிடைப்பதில்லை. பெண்களாகயிருந்தாலும், 1½ ரூபாய்க்கு ஆள் கிடைப்பதில்லை. அவ்வளவுதூரம் பொருளாதாரம் உயர்ந்திருக்கிறது. அதற்கேற்றாற்போல் இல்லாது கொஞ்சம் விலைவாசியும் ஏறியிருக்கிறது. இந்த விலைவாசியேற்றம் முன்பு மாதிரியல்ல. 13 ஆண்டுகளுக்கு முன்பு மத்தியில் இருக்கக்கூடியவர்கள் அதிக லாபம் அடைந்தது போல் அல்ல இன்றைய விலைவாசியேற்றம் இருப்பது. இது குறித்து தமிழ்நாட்டின்மீது அன்புடையவர்கள் சிந்தித்துப் பார்க்கட்டும். விலையேற்றம் ஒரு சிலரைப் பாதிக்கிறது என்பதை நான் மறுக்கவில்லை. நகரங்களில் உத்தியோகங்களில் இருப்பவர்களும், மாதாந்திரச் சம்பளம் பெறக்கூடியவர்களும் இந்த உயர்வால் பாதிக்கப்பட்டிருக்கலாம். ஆனால் இவர்களைவிட அதிக ஜனத்தொகையுள்ள விவசாயிகள், மத்தியதர தொழிலில் ஈடுபட்டிருக்கிறவர்கள் இவர்களை எடுத்துக்கொண்டு எந்தளவு விலைவாசியேற்றத்தைக் குறைப்பது, எந்த நிலையில் குறைப்பது என்பதைச் சொல்லாமல், அப்படிச் சொன்னால் தேர்தலில் விவசாயிகளிடமிருந்தும், மத்தியதர தொழில் வகுப்பாரிடமிருந்தும் தங்களுக்கு பலன் கிடைக்காது, தேர்தல் பிரசாரமாக பயன்படுத்த முடியாதென்று கருதுகிறார்கள். இப்பொழுதே எதிர்கட்சியினருக்கு தேர்தல் ஜுரம் ஆரம்பமாகிவிட்டது. 102, 105, 106 என்று மேலே போய்க் கொண்டிருக்கிறது. இப்படி மேலேயே போய் அவர்கள் ஹிருதயம் வெடித்துவிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

அம்மாதிரி எதிர்கட்சிகளினுடைய இருதயம் வெடித்துவிடாத அளவுக்குப் பார்த்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அறுபது பக்கங்களில் 44 யோசனைகளை தெரிவித்திருக்கிறார்கள். இவைகளில் மேலும் சில யோசனைகள் சொல்லப்பட

வில்லை, இன்னும் சிலவற்றை சேர்க்கவேண்டும் என்று தெரிவித்தால் நன்ருக இருக்கும். அப்படி தெரிவிப்பதாக இருந்தால் சென்ற தேர்தலில் 15 பேர்கள் வந்தது, அப்படியே இந்த தேர்தலிலும் வர முடியும். இல்லையென்ருல் இந்த நம்பரையும்கூட எதிர்பார்க்க முடியாமல் போய்விடக்கூடும் என்பதை தெரிவித்துக்கொள் கிறேன். சென்ற சட்டசபையிலும் இதே போன்றுதான் கம்யூனிஸ்டு தோழர்கள் சொல்லிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் 15 பேர்கள் இருந்தவர்கள் அடுத்த தேர்தலில் 4 பேர்களாக குறைந்துவிட்டார்கள். பேசுகின்ற நேரத்தில் நாட்டிலுள்ள மக்களுக்கு இன்னின்ன திட்டங்களை நிறைவேற்றிக்கொடுத்தால் நன்ருக இருக்கும் என்று ஆராய்ச்சி செய்து பார்த்து சொல்ல வேண்டும். அப்படியிருந்தால்தான் எதிர்கட்சியில் ஏற்பட் டிருக்கும் டெம்பரேச்சரும் குறையும். அதன் காரணமாக அவை களினுடைய இருதயமும் வெடித்துப் போகாமல் இருக்கும் என்பதை தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, இங்கு எதிர்கட்சியிலுள்ள பலர் சொல்லுவது, நீங்களும் எங்களைப்பற்றி குறை சொல்லிவிட்டு பின்ருல் எங்களுக்கும் பல குறைகள் இருக்கின்றன, அவற்றை நிறை வேற்றித்தர வேண்டும் என்று கேட்கிறீர்களே என்று எதிர்கட்சியி லுள்ள திராவிட முன்னேற்ற கழகத் தலைவர் அறிஞர் அண்ணு அவர்களும் கேட்கிருர்கள். ஆளும் கட்சி எங்கள் கட்சியாக இருந் தாலும்கூட எல்லோரும் தீர்க்கதரிசிகளாக இருக்கமாட்டார்கள். எங்களைப்போன்ற பெரியவர்கள் யாரும் இல்லை என்று நாங்கள் நினைப்பதில்லை. என்னென்ன குறைகள் இருக்கின்றன என்பதை எங்கள் கட்சி அங்கத்தினர்களும் கூறிக்கொண்டுதான் இருக்கிருர் கள். அந்த முறையில்தான் காங்கிரஸ் கட்சியிலுள்ள அங்கத்தினர் கள் நடந்துகொள்கிருர்கள். அந்த முறையில் நான் ஒருசில வார்த் தைகள் சொல்ல விரும்புகிறேன். அப்பர் பெரியாறு திட்டத்தைப் பொறுத்தவரை அது மிகவும் அவசியமான ஒரு திட்டமாகும். அந்த திட்டத்தை இந்த சர்க்கார் விட்டுவிட்டது என்று அரசியல் காரணத்திற்காக வேண்டும் என்ருல் பிரசாரம் செய்யலாம். ஆனல் நமது சர்க்கார் இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதற்காக மத்திய சர்க்காரோடு நேரிடையாக தொடர்பு கொண்டிருக்கிறது. ஆகவே, உண்மையில் இதனல் பயன்பெறுகின்ற மக்கள் மீது இங்குள்ளவர்களுக்கு அபிமானம் இருக்குமானல் நிச்சயமாக இந்தப் பிரச்னையைப்பற்றி ஓரளவுதான் இங்கு பேசவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இல்லையென்ருல் அந்த பேச்சு மூலம் ஓரளவுக்கு இந்தத் திட்டம் தடைபட்டாலும் தடைபடலாம் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். ஆகவே, இதைப்பற்றி மாநில சர்க்கார் என்னென்ன செய்துகொண்டிருக்கிறது என் பதைப்பற்றி இந்த சபையில் பல தடவை சொல்லப்பட்டிருக்கிறது. அதே சமயத்தில் மின்சார உபயோகத்திற்காக விட்டுக் கொடுக்க வேண்டுமானலும் விட்டுக்கொடுத்து இதை நிறைவேற்றி, இதன் மூலம் திருநெல்வேலி, ராமநாதபுரம், மதுரை போன்ற இடங்களி லுள்ள மக்கள் பயன்படுகிற அளவுக்கு, அதோடு சுமார் 5 லட்சம்

6th March 1961] [Sri R. Chidambara Bharathi]

ஏக்கர் பயன்படுகிற அளவுக்கு இந்தத் திட்டத்தை சீக்கிரமாகவே செய்து முடிக்கவேண்டிய முயற்சிகள் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்ததாக, அடுத்த ஐந்தாண்டுத் திட்டத்தில் வைகை நதியை ஒரு பாசன நதியாக ஆக்குவதற்கு தகுந்தவாறு வைகை அணை அமைந்திருக்கிறது. அதன் மூலமாக கிழக்கு ராமநாதபுரம் பகுதியிலுள்ள இடங்கள் நீர்ப்பாசன வசதி பெறத்தக்க வகையில் வைகையில் இரு கரைகளிலும் கால் வெட்டுவதென்று ஒரு திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. அதை சீக்கிரமாகவே நிறைவேற்ற வேண்டும். அதோடு வைகை அணை தண்ணீரை விநியோகம் செய்வதிலும் வரமுறையாக சட்டத்திற்குட்பட்ட முறையை வகுக்க வேண்டும். அப்படி ஏற்படுத்துவோமேயானால் ஏராளமான ஏக்கர் நிலங்களில் சிறப்பாக விவசாயம் செய்யமுடியும் என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். அதோடு வரிவிதிப்பு விஷயத்தில், குறிப்பாக விற்பனை வரி விஷயத்தில் எங்கள் பக்கத்தில் தோல் தொழிலில் அதிகமான பேர்கள் ஈடுபட்டிருக்கிறார்கள். இவர்கள் ஒன்றரை ரூபாய்க்கு இந்தத் தொழிலை செய்தாலும் அதற்கும் வரி விதிக்கப்படுகிறது. இதில் ஈடுபட்டிருப்பவர்கள் பெரும்பாலும் பர்மாவிலிருந்தும், சிலோனிலிருந்தும் விரட்டப்பட்டு வந்தவர்கள். இவர்களின்மீது விதிக்கப்படுகின்ற வரியை மாற்றி வேறு ஏதாவது ஒரு வகையில் தனியாக ஒரு முனைவரியிலிருந்து பலமுனை வரியாக ஆக்கப்படுமானால் அதன் மூலம் தமிழ்நாட்டுக்கே நன்மைபயக்கும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். கடைசியாக முக்கியமான ஒரு விஷயத்தைக் கூறி முடித்துக்கொள்ளுகிறேன். விவசாயத்தைப்பற்றி நிதிநிலை அறிக்கையில் சுமார் 24 பக்கங்களில் கூறிவிட்டு, இன்னொரு இடத்தில் இரண்டு லட்சம் ஏக்கர் நிலங்களுக்கு மேல் நீர் தேக்கங்கள் மூலம் வசதி பெற்றிருந்தும் நாம் எதிர்ப்பார்த்த அளவுக்கு உற்பத்தி பெருகவில்லை என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இது நம்முடைய முயற்சி குறைவு என்று சொல்ல முடியாது. இப்போது இருக்கின்ற நீர்த்தேக்கங்களைக் கொண்டே இன்னும் அதிகமாக உற்பத்தி செய்யமுடியும் என்று நான் கருதுகிறேன்.

அநேகமாக பெய்ய வேண்டிய மழைகள் எல்லாம் காலா காலத்தில் பெய்வதில்லை. கார்த்திகை மாதத்தில் பெய்ய வேண்டிய மழை மார்கழி மாதத்தில் பெய்கிறது. சாதாரணமாக புரட்டாசி மாதத்தில் பெய்யவேண்டிய மழை ஐப்பசி மாதத்தில் பெய்கிறது. ஆகவே இதைப்பற்றி விசாரித்து ஒவ்வொரு ஜில்லாவிலும் நல்ல அனுபவமுள்ள விவசாயிகளை அழைத்து, அதோடு நிபுணர்களும் உட்கார்ந்து ஆலோசித்துப் பார்த்து இதில் ஏதாவது மாற்றம் ஏற்படுத்த வேண்டுமானால் மாற்றம் ஏற்படுத்தி தண்ணீர் வினியோக காலங்களை, நீர்தேக்கங்களுக்கு ஏற்றவாறு ஏதாவது மாறுதல் செய்யவேண்டுமானால் அதையும் செய்து பார்த்து அதன் மூலம் உற்பத்தியை அதிகரிக்க முடியுமா என்பதைப்பற்றிய முடிவுக்கு வரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

(மணியடிக்கப்பட்டது)

[6th March 1961

**SRI M. P. SUBRAMANIAM :** சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, நிதி அமைச்சர் அவர்கள் 61-62-ம் ஆண்டுக் கான நிதிநிலை அறிக்கையை ஏறத்தாழ 60 பக்கங்களில் தயாரித்து இந்த சபையில் அளித்திருக்கிறார்கள். இந்த அறிக்கை முக்கிய மான அறிக்கை என்பதை நானும் ஒத்துக்கொள்கிறேன். அதற்கு காரணம் நிதி அமைச்சர் அவர்கள் இந்த ஆண்டுக்குப்பின்னால் டில்லி சர்க்கார் அமைச்சராக வரப்போகிறார் என்று செய்தித்தாள் களில் காணும் செய்தியாகவும் இருக்கலாம். 1961-62-ல் பொது தேர்தல் வரப்போகிறது என்கிற காரணத்திற்காக, நாட்டு மக்களுக்கு அரசியல் கண்ணோட்டத்தில் ஒரு தேர்தல் விஞ்ஞா பனத்தை கொடுக்கின்ற முறையில் இது அமைந்திருப்பதும் இருக்கலாம். கடந்த பத்து ஆண்டு காலத்தில் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் முடிவடைந்து, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தை துவக்க இருக்கின்ற இந்த நேரத்தில் நாட்டு மக்களுக்கு இதுவரை இந்த அரசாங்கம் சாதித்த காரியங்கள் எல்லாம் எடுத்துச் சொல்லுகிற அளவில் இந்த அறிக்கை தயாரிக்கப்பட்டிருக்கிறது என்று நான் நினைக்கிறேன். இந்த அறிக்கையில் பல விஷயங்கள் சுட்டிக்காட்டியிருப்பதில் சில அரிய உண்மைகள் வெளிவந்திருப்பதைப் பார்த்து நான் உண்மை யிலேயே மகிழ்ச்சி அடைகிறேன். இந்த அறிக்கையைத் துருவிப் பார்த்தால் பல புள்ளி விவரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த நாட்டில் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் அமுலாக்கப் பட்டதின் காரணமாக உணவு உற்பத்தி கணிசமான அளவில் பெருகியிருக்கிறது, ஜவுளி உற்பத்தி பெருகியிருக்கிறது, எண்ணெய் வித்துக்களை போன்ற பல பொருள்கள் பெருகியிருக்கிறது, வேறு பல துறைகளிலும் உற்பத்தி அதிகரித்திருக்கிறது என்று கூறி புள்ளி விவரங்களை கொடுத்துவிட்டு பின்னால் நிதி அமைச்சர் அவர்கள் கூறுகிறார்கள், "நாட்டின் உற்பத்தி சக்தி கணிசமான அளவில் பெருகி, மக்களின் வாழ்க்கைத்தரம் உயரும் போதுதான் சமுதாயத்திலே இன்று காணப்படுகின்ற குறைகளும் ஏற்றத்தாழ்வுகளும் நீங்க வழி எற்படும்" என்று குறிப்பிட்டிருக் கிறார்கள். எவ்வளவோ புள்ளிவிவரங்களை கொடுத்திருக்கிறார்கள். ஆனால் வாழ்க்கைத்தரம் உயர்ந்திருக்கிறதா என்று பார்த்தால் ஒரு பக்கத்தில் எத்தனையோ திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு பல முன்னேற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன, என்று சொல்லிவிட்டு, அதன் பின்னால் அதன் காரணமாக தனிநபர் வருமானம் போது மான அளவுக்கு பெருகியிருக்கிறதா என்று பார்த்தால் வரவர குறைந்து தான் வருகிறது என்று சொல்லக்கூடிய அளவுக்குத் தான் நிலைமை இருந்து கொண்டிருக்கிறது. இன்னும் சுருக்கமாகச் சொல்லப்போனால் கடந்த 14 ஆண்டு களில் காங்கிரஸ் அரசாங்கம் கோடிக் கணக்கான ரூபாய் செலவழித்தும் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங் கள் முடிவடைந்தும் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட துவக்கத்தில் என்ன நிலைமை இருக்கிறது என்று கேட்டால், ஏழை இன்னும் ஏழையாகவே இருந்து கொண்டிருக்கிறான் என்பதைத்தான் காண முடிகின்றது. இதை நான் சொல்லவில்லை, நிதி அமைச்சர் அவர் களே அவர்களுடைய அறிக்கையில் சொல்லுகிறார்கள். தனி நபரின் வாழ்க்கைத்தரம் குறைந்து வருகிறது என்றால் இதுதான்

6th March 1961] [Sri M. P. Subramaniam]

பொருள். வாழ்க்கைத்தரம் உயர்ந்திருக்கிறது என்பது, பெரும் பணக்காரர்களாக இருப்பவர்கள் 10 பஸ்களை வைத்து நடத்திக் கொண்டிருந்தவர் இப்போது 12 பஸ்களை வைத்து நடத்திக் கொண்டிருக்க முடிகிறது அல்லது 2 ஆலைகளை நடத்திக்கொண்டிருந்தவர் இப்போது மூன்று ஆலைகளை நடத்த முடிகிறது என்பதல்ல. இந்த நாட்டிலே வீதியில் திரியக்கூடிய ஏழை மகனின் வருவாய் இந்த ஆண்டு 6 அணுவாக இருந்தது, அடுத்த ஆண்டு 7 அணு ஆயிற்று. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிந்த இந்த நேரத்தில் 12 அணு ஆயிற்று என்று எடுத்துக் காட்டினால் அதுதான் நாட்டின் முன்னேற்றத்தைக் காட்டுவதாக இருக்கும். தனி மனிதனின் வருமானம் வரவரக் குறைகிறது என்று சொல்லக் கூடியதைக் கண்டு நான் மகிழ்ச்சியடைகிறேன். காரணம் நாங்கள் இது வரையில் சொல்லிக்கொண்டு வந்த குற்றச்சாட்டை ஒத்துக் கொள்ளுவது போல நிதி அமைச்சர் அவர்களே முன்வந்து ஒத்துக் கொண்டிருப்பதைக் காண நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். (குறுக்கீடு) ஏழை மேலும் ஏழையாகி விட்டான் என்று நாங்கள் சொல்வதை எதிர்த்துப் பேசிக்கொண்டிருந்து விட்டு இப்போது அதை மறைமுகமாக ஒப்புக்கொண்டிருப்பதைத்தான் நான் குறிப்பிட்டுச் சொல்கிறேன்.

உணவு உற்பத்தியைப் பொறுத்த வரையில் இங்கே குறிப்பிடப்பட்டிருக்கிறது, இந்த ராஜ்யத்தில்தான் மற்ற எல்லா ராஜ்யங்களைக் காட்டிலும் அதிகப்படியான அளவுக்கு அரிசி உற்பத்தி செய்யப்படுகிறது என்று, ஒரு ஏக்கருக்கு 1,322 ராத்தல் அரிசி உற்பத்தி செய்யப்படுவதாகக் கூறி, இதை அரசாங்கத்தின் சாதனையாகவே காட்டப்பட்டிருக்கிறது. உண்மை நிலையைப் பார்த்தால் விவசாயத்திலே நம் மாநிலத்தைப் பொறுத்த வரையில் எவ்வளவு மக்கள் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பதை மற்ற மாநிலங்களோடு ஒப்பிட்டுப்பார்த்தால் இந்தியாவிலே மிகக் குறைந்த தனி நபர் உற்பத்தி எங்கே என்று கேட்கும்போது சென்னை மாநிலத்தில்தான் என்று சொல்லும்போது நாமெல்லோரும் வெட்கித் தலை குனிய வேண்டியிருக்கிறது. 1,000 பேர்கள் செய்ய வேண்டிய வேலையை 2,000 பேர்கள் செய்துகொண்டிருக்கிறார்கள். தனி நபர் உற்பத்தியை எடுத்துக்கொண்டால் அனைத்திந்தியாவிலும் இது குறைவு என்பதை இந்த அறிக்கையிலேயே கொடுத்திருக்கிறார்கள்.

அடுத்தபடியாக இங்கே குறிப்பிட விரும்புவது, இந்த அறிக்கையில் முக்கியமாக எல்லோரும் மகிழ்ச்சி தெரிவிக்கத் தக்க வகையில் ஒரு சலுகை தரப்பட்டிருக்கிறது. 11-வது வகுப்பு வரையில் சாதி அடிப்படையில்லாமல் எல்லோருக்கும் இலவசமாக கல்வி கற்க சலுகை வழங்கப்பட்டுள்ளது. இதனால் நன்மை அடையக் கூடியவர்கள் எவ்வளவு பேர்கள் இருப்பார்கள் என்பது ஒரு புறமிருக்க, 100 ரூபாய்க்குக் குறைவாக வருமானம் வரக் கூடியவர்கள்தான் ஏழைகள் என்ற கருத்தில் அரசாங்கம் திட்டம் போட்டிருக்கிறது. அப்படிப் பார்த்தால் சாதாரண ஒரு தொழிலாளி கூட இன்றைய தினம் 100 ரூபாய் சம்பளம் வாங்கக் கூடிய நிலையில் இருக்கிறான். பல தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்த

பிள்ளைகளும், பின்தங்கிய வகுப்பினரைச் சேர்ந்த பிள்ளைகளும் பெற்றோருக்கு 100 ரூபாய் அளவுக்கு வருமானம் வருகிறது என்ற அடிப்படையில் இந்தத் திட்டத்தின்கீழ் வரமுடியாமல் சலுகை பெற முடியாமல் போய்விடலாம் என்று நான் இங்கே சுட்டிக் காட்ட விரும்புகிறேன். இன்னும் மற்றொன்று கூற விரும்புவது. எந்தச் சலுகையாக இருந்தாலும், அதைப்பற்றி முதன் முதலாக சட்ட சபையில் அறிவிக்க வேண்டுமே தவிர, அரசியல் கட்சிக் கூட்டங்களிலும் மற்ற இடங்களிலும் பேசிவிடுவது இந்தச் சபையின் கௌரவத்திற்கு இழுக்குத் தேடுவதாக இருக்கிறது. எதையும் இந்தச் சபைக்கு முதலில் அறிவிக்காமல் பொதுக் கூட்டங்களில் அறிவிப்பதானது சரியல்ல என்று எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

அடுத்து நான் குறிப்பிட விரும்புவது இந்த அறிக்கையில் நமது அரசாங்கதிற்கு டில்லி சர்க்காரினால் அளிக்கப்பட்டு வந்த மானியங்கள் சில நிறுத்தப்பட்டுவிடும் என்று குறிப்பிடப்பட்டிருப் பதைக் கண்டு மிகவும் வருத்தப்பட வேண்டியிருக்கிறது. இரண் டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சில திட்டங்களுக்காக மத்திய சர்க்கார் கொடுத்து வந்த மான்யங்களும், குறைந்த ஊதியம் பெரும் ஊழியர்களின் ஊதியத்தை அதிகரித்த வகையில் மத்திய சர்க்கார் அளித்து வந்த மான்யத்தொகையும், ஆக இந்த இரண்டு தொகைகளும் நிறுத்தப்படும். நாங்கள் மத்திய சர்க்காருக்கு வேண்டுகோள் விடுத்தும்கூட, மூன்றாவது நிதிக் கமிஷன் அறிக்கை வரும் வரையிலாவது இருக்கவேண்டுமென்று சொல்லியும் அவர்கள் ஒத்துக்கொள்ளவில்லை என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது மிகவும் கண்டிக்கத் தக்க போக்கு என்று நான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஆரம் பிக்கப்பட்ட திட்டங்களை மேற்கொண்டு நிறைவேற்றுவதற்கும், வேறு பல திட்டங்களைப் போடுவதற்கும், மத்திய சர்க்கார் கொடுத்து வந்த இனங்களுக்கும் வருவாய் தேட வழிவகைகளைச் செய்ய வேண்டிய பொறுப்பு ஏற்பட்டிருக்கிறது. மூன்றாவது நிதிக் கமிஷன் அறிக்கையில் மாநில சர்க்காருக்கு எலாஸ்டிக் இன் கமாக வரக்கூடிய வரிகளை ஒதுக்குவார்கள் என்ற நம்பிக்கை இருக்கிறது. இது வரையில் கொடுத்து வந்த கணிசமான உதவியை நிறுத்திவிட்ட காரணத்தினால் பாதகம் ஏற்படாமல் தொடர்ந்து அந்தத் திட்டங்களை நடத்துவதற்கு வருவாய் தேட வழிவகை செய்யவேண்டுமென்று கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

உணவு உற்பத்தியைப் பொறுத்த வரையில் மீண்டும் குறிப்பிட விரும்புவது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் 12 லட்சம் டன் உற்பத்தி செய்யவேண்டும் என்று லட்சியம் வைத்துக் கொண்டதில் 7 லட்சம் டன்தான் உற்பத்தி செய்ய முடிந்தது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். உண்மைக் காரணம் இதற்கு அவர்கள் சொல்வது உரத் தட்டுப்பாடு என்பதாகும். ஆனால் அது காரணம் அல்ல. ஏனென்றால் இன்னும் தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் பல லட்சக்கணக்கான ஏக்கர் தரிசு நிலங்கள் இன்றும் சாகுபடிக்குக் கொண்டுவரப்படவில்லை. பல அங்கத்தினர்கள் சுட்டிக்காட்டியது போல 10 ஆண்டு காலமாக தரிசு நிலங்களை ஏழை மக்களுக்கும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் பகிர்ந்து கொடுத்

6th March 1961] [Sri M. P. Subramaniam]

றும் இது வரையில் அவைகளில் பயிர் செய்யப்படவில்லை. நிலமில்லாத ஏழையாக இருக்கக்கூடியவனுக்கு நிலத்தைக் கொடுத்தும் அதனை சாகுபடி செய்ய மூலதனம் இல்லாத காரணத்தினால் அப்படியே ஒன்றும் செய்யாமல் விட்டு வைக்கப் பட்டிருக்கிறது. அரசாங்கம் இதற்கு இது வரையில் ஒரு திட்டம் வகுக்கவில்லை, ஆகையால் தவறு இங்கே இருக்கிறது என்று நான் குறிப்பிட விரும்புகிறேன். எவ்வளவுதான் உடத்தை அதிகமாகத் தயார் செய்து கொடுத்தாலும் இந்த லட்சியத்தை ஒரு நாளும் நம்மால் அடைய முடியாது என்று திட்டவட்டமாகக் குறிப்பிட விரும்புகிறேன்.

அடுத்து நான் குறிப்பிட விரும்புவது சிறிய நீர்ப்பாசனத்தைப் பற்றி. இன்றையதினம் எவ்வளவுதான் அரசாங்கம் சினிமா படம் போட்டுக் காண்பித்தாலும் மக்கள் நம்பிக்கை பெற மாட்டார்கள். நம்பிக்கை பெற வேண்டுமானால் சர்க்கார் இதைப் போன்ற காரியங்களைப் புறக்கணிக்கக் கூடாது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சிறிய நீர்ப்பாசனத்திற்காக 8 கோடி ரூபாய் செலவு செய்திருக்கிறார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இன்னும் 8 கோடி ரூபாய் செலவு செய்ய இருக்கிறார்கள் என்று இங்கே குறிப்பிட்டிருக்கிறார்கள். நமது ராஜ்யத்திலே 27,000 ஏரிகளும் குளங்களும் இருப்பதாக புள்ளிவிவரம் கூறுகிறது. பெரும்பாலும் அதன்கீழ் இருக்கவேண்டிய ஆயக்கட்டு இல்லாமல் இருக்கிறது. ஏற்கெனவே 100 ஏக்கர் ஒரு குளத்தின்கீழ் பயிரிடப் பட்டு வந்ததென்றால் இன்றைய தினம் 50 ஏக்கர் நிலத்தைப் பயிரிடக்கூட தண்ணீர் இல்லை. பெரும்பாலான குளங்கள் செப்பனிடப்பட்டு, தூர் வாரி, ஆழப்படுத்தப்பட வேண்டும். இதற்காக அரசாங்கம் நிதி ஒதுக்கியிருக்கிறதா என்றால் இல்லை. 36 லட்சம் ரூபாய் ஒதுக்கி 47 குளங்களை இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் செப்பனிட்டதாகச் சொல்லியிருக்கிறார்கள். அடுத்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 80 லட்சம்தான் ஒதுக்கப் பட்டிருக்கிறது. இந்த 80 லட்சம் ரூபாயில் 100 குளங்களைச் செப்பனிடலாம். 27,000 குளங்களில் 100 குளங்களை மட்டும் செப்பனிட்டால் ஏற்கெனவே இருக்கக்கூடிய நீர்ப்பாசன வசதிகள் அற்றுப்போய்விடும் என்று கூற விரும்புகிறேன். உணவு உற்பத்தி பெருக இந்த சிறிய நீர்ப்பாசனத் திட்டத்தில் அரசாங்கம் முக்கிய அக்கறை செலுத்துவது மிகவும் அவசியம் என்று இந்த நேரத்தில் குறிப்பிட விரும்புகிறேன்.

அடுத்தபடியாக இங்கே குறிப்பிட விரும்புவது, சமுதாய நலத் திட்டத்தைப் பொறுத்த வரையில் சமுதாய நலத் திட்ட அதிகாரிகள் தாங்கள் சர்க்கார் ஊழியர்கள் என்ற எண்ணமே இல்லாமல் ஆளும் கட்சியை திருப்திப்படுத்த வேண்டியவர்களாக இருக்கிறோம் என்ற எண்ணம் எல்லா கிராமங்களிலும் நிச்சயமாக இருக்கிறது என்று சான்றோடு, உதாரணத்தோடு என்னால் கூற முடியும். இந்த அதிகாரிகள் சமுதாய நலத் திட்டத்தின்கீழ் பல விழாக்கள் கொண்டாடப்படும்போது காங்கிரஸ்காரர்களை அழைத்து, விழாவைப் பற்றிய சுவரொட்டிகளில் போடும்போது மண்டல காங்கிரஸ் கமிட்டித் தலைவர் என்று கூடப் போட்டு அத்தகைய விழாக்களில் அவர்களை அழைக்கிறார்

[Sri M. P. Subramaniam] [6th March 1961

கள். அதே நேரத்தில் மற்ற கட்சிக்காரர்களை அழைப்பது கிடையாது. அப்படி அழைத்தாலும் கம்யூனிஸ்ட் கட்சி, டி. எம். கே. கட்சித் தலைவர்களின் பெயரைப் போட அஞ்சுகிறார்கள். இதை நான் ஆதாரத்தோடு கூற விரும்புகிறேன். காங்கிரஸின் 60 ஆண்டு நிறைவு வைரவிழாவில் பல பி.டி.ஓ.-க்கள் பங்கு கொண்டு அதைச் சிறப்பாக நடத்துவதற்கு வேண்டிய வேலைகளைச் செய்வதில் ஈடுபட்டிருந்தார்கள். காரணம் அப்போதுதான் அங்குள்ள காங்கிரஸ்காரர்கள் அமைச்சர் வரும்போது அவரைப்பற்றி நான்கு வார்த்தைகள் சொல்வார்கள் என்ற எண்ணம் அவர்களுக்கு இருக்கிறது. அப்பேர்ப்பட்ட நிலைமை இருக்கிறது என்று இந்த நேரத்தில் குறிப்பிட விரும்புகிறேன். இன்னும் அதிகமாகச் சொல்ல வேண்டுமானால் சமுதாய நலத் திட்டத்தை நிறைவேற்றும் முக்கிய பொறுப்பு ஏற்றுக்கொண்டிருக்கின்ற பெரிய அதிகாரிகள்கூட அதிகாரிகளைச் சந்தித்து ஐந்தாண்டுத் திட்டங்களில் காங்கிரஸ் இந்தக் காரியங்களைச் செய்திருக்கிறது, டி.எம்.கே. பிரசாரங்களை நம்பவேண்டாம் என்று மக்களுக்குச் சுட்டிக்காட்டுங்கள் என்று சொல்லக்கூடிய அளவுக்கு கட்சிப் பிரசாரம் இருக்குமானால் இந்த நாட்டிலே ஜனநாயகம் தழைத்து ஓங்குமா என்று நிதி அமைச்சர் அவர்கள் யோசிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக முக்கியமான பிரச்னை தொழில் வளர்ச்சி. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 291 கோடி ரூபாய் நம் அரசாங்கத்திற்கு ஒதுக்கப்பட்டிருப்பதாகச் சொல்லியிருக்கிறார்கள். அவர்களின் வாதப்படி பார்த்தாலும் நம் ராஜ்யத்தில் 34 கோடி ரூபாய் அதிகம் செலவு செய்திருப்பதாகச் சொல்லுகிறார்கள். 13 கோடி ரூபாய் வருவாய் தேடிக்கொள்ளவேண்டும் என்று எதிர்பார்த்ததில் 24 கோடி ரூபாய் கிடைத்தது என்று சொல்லுகிறார்கள். மக்களிடத்தில் எதிர்பார்த்ததை விட கடன் கிடைத்திருக்கிறது என்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். எல்லா விதத்திலும் ஐந்தாண்டுத் திட்டத்தை நடத்தி வைத்ததில் தங்களுக்கு தனிச் சிறப்பு இருக்கிறது என்று பெருமை அடித்துக் கொள்கிறவர்கள் அதிகப்படியான சலுகைகளை மத்திய அரசாங்கத்திடமிருந்து பெற்றிருக்கவேண்டும். அதற்கு மாறாக கிடைக்க வேண்டிய தொகை குறைக்கப்பட்டிருக்கிறது என்று கூற விரும்புகிறேன். இது வரையில் மத்திய அரசாங்கம் தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில் என்ன செலவு செய்திருக்கிறார்கள் என்று பார்த்தால், பெரம்பூர் கோச் பாக்டரியைத் தவிர குறிப்பிடத்தகுந்த திட்டம் வேறு ஒன்றுமில்லை. முதல் ஐந்தாண்டுத் திட்டத்திலும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் 7,000 கோடி வரையில் செலவு செய்து, தமிழ் நாட்டில் காபிடல் இன்வெஸ்ட்மெண்ட் என்ன என்று கேட்டால் 7½ கோடி ரூபாயில் பெரம்பூர் கோச் பாக்டரியைத் தவிர வேறு ஒன்றுமில்லை. நெய்வேலியைத் துவக்கியிருக்கிறார்கள். என்ன ஆகப்போகிறது என்று பொறுத்திருந்து பார்க்கவேண்டும்.

1 p.m.

நெய்வேலித் திட்டத்தை பெரிய அளவில் ஏற்படுத்தப் போவதாகச் சொல்லப்படுகிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே நம்முடைய மாகாணத்திலே அதிக அளவில் தொழில் மயமாக்க

இருக்கின்றோம் என்று இந்த அரசாங்கம் சொல்லிக்கொண்டு வருகிறது. அதுவும் இல்லையென்றுதான் சொல்லவேண்டும். நிதி மந்திரி அவர்கள் குறிப்பிட்டிருக்கிறார்கள். இப்போது நீலகிரி ஜில்லாவில் கச்சா பிலிம் தொழிற்சாலை அமைப்பதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன என்று. அதேபோல், கிண்டியில் ரண சிகிச்சை கருவிகள் உற்பத்தி செய்வதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன என்றும் கூறினார்கள். நிதி அமைச்சர் அவர்கள் இந்த இரண்டையும்தான் உறுதியாக கூறியிருக்கிறார்கள். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில், கனரக மின்சாரக் கருவிகளை உற்பத்தி செய்ய ஏற்படுத்தப்போகும் இரண்டு தொழிற்சாலைகளில் ஒன்றை இங்கு ஏற்படுத்தக்கூடு மென்றும் நிதி அமைச்சர் அவர்கள் கூறியிருக்கிறார்கள். இந்த நம்பிக்கை பல ஆண்டுகளாக தெரிவிக்கப்பட்டு வந்திருக்கிறது. ஆனால் அது இங்கு ஏற்படப் போவதில்லை.

மூன்றாவது திட்டத்திலே ஆயிரம் கோடி ரூபாய் செலவு செய்கின்ற இடத்திலே, மத்திய அரசாங்கத்திடமிருந்து நமக்குக் கிடைத்திருக்கக்கூடிய பங்கு 380 கோடி ரூபாய்தான். ஆகவே நமக்கு கணிசமான அளவு உதவித் தொகை கிடைக்கவில்லை என்று நன்கு தெரிகிறது. ஆகவே இதிலிருந்து நமக்கு இத்திட்டம் நிறைவேற்றப்படக்கூடும் என்ற நம்பிக்கை ஏற்படுவதற்கில்லை. ஆனால் இந்த இடத்திலே இதை ஏன் இப்படி குறிப்பிட்டிருக்கிறார்கள் என்றால், தேர்தலுக்கு முன்னாலே நாட்டு மக்களுக்கு இப்படி ஒரு திட்டம் அமைக்க முயற்சி எடுக்கப்பட்டு வருகிறது என்று அவர்களுடைய பிரசாரத்திற்கு ஒரு சாதனமாக அமைத்துக்கொள்ள செய்திருக்கிறார்களே தவிர உண்மையிலேயே நாட்டு மக்களுக்கு, குறிப்பாக ஏழை மக்களுக்கு உதவி செய்யக்கூடிய வகையில் இந்த வரவு செலவுத் திட்டம் அமைக்கப்படவில்லை. இந்த ஒரே குறிக்கோளைக் கருத்தில் கொண்டு, காங்கிரஸ் பிரசாரத்திற்காகவே சிரத்தையுடன் இந்த உரை தயாரிக்கப்பட்டிருக்கிறதே தவிர, இந்தச் சபையின் கவுரத்தைக் காப்பாற்றக்கூடிய முறையில் நிதி அமைச்சர் அவர்களின் உரையில்லை என்பதைக் கூறிக்கொண்டு, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

* SRIMATHI A. SUARES : Mr. Deputy Speaker, Sir, this year's budget estimate shows a revenue deficit of Rs. 2,85 lakhs. In the current year there was originally a deficit of Rs. 34 lakhs. Besides covering this deficit the Revised Estimates show a revenue surplus of Rs. 1,23 lakhs after paying Rs. 4 crores for the implementation of the Pay Commission recommendations for Government employees and teachers. I think this deficit of Rs. 2,85 lakhs will also be covered. The no-additional-taxation feature of the budget is welcomed by everyone.

I wish to congratulate the Government on their successful completion of the Second Five-Year Plan. They have not only reached the original target of Rs. 1,52 crores but it has been exceeded by Rs. 34 crores. The year 1961-62 will be the first year of the Third Five-Year Plan. The proposals laid down in the Budget

[Srimathi A. Suares] [6th March 1961

for the starting of the new plan present a hopeful picture of progress and advancement in every department. Emphasis is rightly placed on increased food production. This includes increase in chemical fertilisers, organic manures, improved seeds and increased minor irrigation. During the coming financial year we hope to secure lignite from the Neiveli lignite mines. The first generator of power will function at the same time and the subsidiary industries will be started. A new era of industrial progress is envisaged in the coming years and the whole State will look forward to the success of the Neiveli Lignite Project.

In the past years at the Budget session I have always made a plea for the special grants for Anglo-Indian Education. This year there is need for me to make this request, for the Budget Estimate shows provision for the full amount of grants given to Anglo-Indian schools in the past. Our protection period of 10 years ended in January 1960, and the Madras Government was kind enough to allot the same amount of grants in 1960–61. Since then we have received an assurance from the Hon. Minister for Education that the Madras Government considers Anglo-Indian education as a problem of their own and not a separate problem. The Government would not only maintain the high standards of this type of education but also improve them. This assurance was given by the Hon. Minister for Education to the heads of Anglo-Indian schools at a recent function. On that occasion, he was pleased to state that in the process of the integration of India, the Anglo-Indian community was playing a notable part and that the Government was fully conscious of the same. I would like to assure the Government that the Anglo-Indians will continue to play their part in the national development of the country.

There is a welcome announcement in the Budget speech about the extension of free educational concessions on the basis of economic backwardness rather than on the basis of communal status. I congratulate the Government on their decision to etxend free education up to the XI Standard to all children irrespective of caste or creed. I presume that this concession will apply also to Anglo-Indian schools. This is a great step forward. Free education up to XI Standard will ensure a minimum of High School education for larger number of boys and girls. This concession will provide a better type of worker in the numerous industries that are now springing up in the State. With this higher minimum of education polytechnic schools will attract larger numbers and these will in due course be absorbed in our factories.

Another encouraging announcement in the Budget speech is the implementation of the scheme of compulsory primary education during the Third Five-Year Plan. This scheme will bring all children within the age group of 6–11 to school. Attempts had been made during the last 4 or 5 decades to induce children from the villages to attend schools at least for a period of five years in order to attain permanent literacy. Great educationists like the late Mr. Champion and Mr. Statham tackled this problem in the

6th March 1961] [Srimathi A. Suares]

past but no tangible results could be achieved as there was no compulsion. Pilot schemes to enforce compulsion in small areas were tried but they had to be given up because of the poor response from the people. But things are different now and with the introduction of a planned programme of compulsory primary education to cover the whole State, the goal of permanent literacy is in sight. I am sure that the Madras State will once again lead other States in India in this educational reform.

Mention is made in the Budget speech, of the Integral Coach Factory which is making great progress. I wish to make a representation on behalf of the employees of the Integral Coach Factory. This factory went into production in 1955. It has developed rapidly and will produce 700 coaches per year from 1961-62. The number of employees has risen to about 6,000 or more. To provide for this large number only 1,000 quarters have been built. Consequently, at least 5,000 employees have to find accommodation wherever it is available. At present they live in Perambur, Ayanavaram, Villivakkam, Madras City and elsewhere. It is surprising that transport facilities have not been provided for the large number of workers.

There are two parallel roads near the Integral Coach Factory. One of them is Constable Road which is within railway territory and the other Konnur High Road has bus route No. 20 of the State Transport. Thousands of people have to go to work in the Coach Factory and in the Southern Railway Workshop. There is no bus connection to these places as well as to the Perambur Railway station. Between these two parallel roads there are Railway offices, the Railway hospital and Railway Quarters. To the north of the Constable Road are located the Integral Coach Factory and Southern Railway Workshop. To the south of Konnur High Road lie the Integral Coach Factory Colony and more Railway Quarters.

I would request the Government to take up this question at an early date and to provide a diversion of bus route No. 20 or any other route to touch Constable Road and Perambur Railway Station. Thousands of children have to attend schools in Villivakkam. Perambur and Madras City proper. At present, they have either to walk, or use jutkas and cycles to go to the Perambur Railway Station to catch a local train. If there is connection between the two parallel roads and the Perambur Railway Station, it would save time and also money. This is an important Coach Factory. Distinguished visitors like Her Majesty Queen Elizabeth, His Royal Highness Prince Philip and other high dignitaries of Europe have visited Coach Factory. In view of the importance of this factory and the large number of workers involved, I respectfully appeal to the Government to look into this matter and to request the Railway Authorities for a "right of way" through the railway ground. The General Manager is prepared to consider the proposal if the State Transport Authorities will make a representation to him. I hope the Government will take up this matter at an early date.

[6th March 1961

* SRIMATHI HEMALATHA DEVI : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, மதிப்பிற்குரிய நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்து உள்ள 1961-62-வது ஆண்டு நிதிநிலை அறிக்கையில் இது வரையில் நமது அரசாங்கம் இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் மூலமாக செய்துள்ள காரியங்களையும், இனி மூன்றாவது ஐந் தாண்டுத் திட்டத்தில் செய்யப்போகும்படியான காரியங்களையும் நல்ல விளக்கமாக தெளிவாக எடுத்து உரைத்திருக்கிறார். நான் அதை மனமார வரவேற்று பாராட்டுகிறேன். நமது நிதி அமைச்சர் அவர்களையும், இந்த அறிக்கை சமர்ப்பிப்பதற்காக வேண்டி உறு துணையாக இருந்து ஆற்றல் புரிந்த அத்தனை பேர்களுக்கும் என் னுடைய பாராட்டுதலை தெரிவித்துக்கொள்ளுகிறேன். நாட்டின் முன்னேற்றத்திற்காக வேண்டி நல்லெண்ணம் படைத்த எல்லோ ருக்கும் இந்த அறிக்கையானது நல்லதோர் அறிக்கை என்றே தோன்றும். ஆனால், எதிர்ப்பு பேசுகிறவர்களுக்கோ அப்படித் தோன்றவில்லை. ஏதோ பொதுமக்களிடையே திராவிட நாடு அமைத்துவிடுகிறோம் என்று தேர்தல் பிரசாரம் செய்யலாம் என்றாலோ, திராவிட நாடு அமைப்பது என்பது பகல் கனவு என்று பொது மக்கள் புரிந்துகொண்டு விட்டார்கள். அதைப்பற்றி பேசு தல் பிரயோசனம் இல்லை என்று தெரிந்துவிட்டது. தமிழ் நாட்டுப் பிரச்னையை வைத்து மக்களிடையே பிரசாரம் செய்யலாம் என்றாலோ தமிழ் மொழியை ஆட்சி மொழியாக அமுலாக்கிய அரசாங்கம் சென்னை ராஜ்யம் என்பதை தமிழ் நாடு என்று மாற்றி அமைப்பதாக குறிப்பிட்டு விட்டார்கள். இனியும் அதைப்பற்றி பேசுவதில் பிரயோசனம் இல்லை. எனவே தேர்தல் சமீபித்து விட்டதே, இதுதான் கடைசி நிதி நிலை அறிக்கை, இதை வைத்து ஏதாவது குற்றங்குறை கண்டுபிடிக்கலாம் என்று கண்ணில் விளக் கெண்ணை போட்டுக்கொண்டு பார்க்கலாம் என்றாலோ, சென்ற ஆண்டு நிதி நிலை சமர்ப்பிக்கும்பொழுது கனம் நிதி அமைச்சர் அவர்கள் இனி வரி எதுவும் போடப்போவதில்லை என்று விளக்கம் தந்தார்கள். அதுபோன்றே இப்பொழுது சமர்ப்பித்துள்ள அறிக் கையிலும் ஒருவிதமான வரியையும் குறிப்பிடவில்லை. இது எதிர்க் கட்சிக்காரர்களுக்கு ஒரு பெரிய ஏமாற்றத்தையும், பயத்தையும் கூட அளித்திருக்கிறது என்றால் அதில் ஆச்சரியப்படுவதற்கு இல்லை என்றுதான் சொல்லவேண்டும். ஏதோ மாநில சர்க்கார் வரிபோடாவிட்டாலும், மத்திய சர்க்கார் வரி போட்டிருக்கிறார் களே, அது ஒரு பெரிய குறைபாடு என்று சொல்லுகிறார்கள். மேலும் பஞ்சாயத்து யூனியன் மூலம் வரிகளை வசூலிக்கிறார்கள் என்று கூறுகிறார்கள். ஆனால், அதை அவர்கள் சொல்லும்பொழுது நான் ஒரு விளக்கத்தை மட்டும் எடுத்துக்கூற விரும்புகிறேன். ஆட்டுக்குட்டி ஓநாய் கதை என்று சொல்லுவது எல்லோருக் கும் தெரியும். ஆட்டுக்குட்டி ஓடைக்கரையில் பள்ளத்தில் நின்று கொண்டிருந்தது. மேட்டில் நின்றிருந்த ஓநாய் ஆட்டுக் குட்டியைப் பார்த்து 'நான் குடிக்கும் தண்ணீரை கலக்கிவிட்டாயே? எனவே நான் உன்னை கடித்துத் தின்றுவிடுகிறேன்' என்று சொன்னது. ஆட்டுக்குட்டி அதற்கு என்ன சொல்லிற்று என்றால், 'நானோ பள்ளத்தில் இருந்து தண்ணீர் குடிக்கிறேன். நீதானே மேட்டில் இருக்கிறாய். அப்படியிருக்கும்பொழுது நான் எப்படி நீ குடிக்கும் தண்ணீரை கலக்கிவிட்டிருக்க முடியும் என்று கேட்டது. அதற்கு

6th March 1961] [Srimathi Hemalatha Devi]

ஓநாய் 'நீ இப்பொழுது தண்ணீரை கலக்கவில்லை என்று சொன்னாலும் உன்னுடைய பாட்டனோ, பாட்டியோ முன்னொரு காலத்தில் கலக்கி விட்டிருக்க வேண்டும். ஆகவே, உன்னை இப்பொழுது கடித்துத் தின்னப் போகிறேன்' என்று சொல்லிற்றாம். அதுமாதிரி மாநில அரசாங்கம் வரி போடவில்லை என்றாலும், மத்திய சர்க்கார் வரி போட்டிருக்கிறார்கள், பஞ்சாயத்துகள் வரி வசூலிக்கிறார்கள் என்று குறை கூறுகிறார்கள். வீட்டுவரி மூலம் பஞ்சாயத்துகள் வசூலிக்கும் அளவிற்கு இணைப்பு மானியத்தை சர்க்காரிடமிருந்து பெறுகிறோம். உண்மையிலேயே நாடு முன்னேற்றம் அடையவேண்டுமென்றால் பஞ்சாயத்துப் பகுதிகளில் உள்ள குறைகளைப் போக்கவேண்டும் என்று சொன்னால், ஒரு பங்குத் தொகையை அந்தப் பகுதி மக்களிடமிருந்து வசூல் செய்து, அதற்கு இணைப்பு மானியத்தை அரசாங்கத்திளிடமிருந்து பெற்றால், அதுபற்றி சந்தோஷப்படவேண்டும். எதிர்ப்புப் பிரசாரம் செய்யக்கூடியவர்கள் பஞ்சாயத்து யூனியன்களில் போடும் வரியின் விவரத்தை கிராமந்திரங்களுக்குச் சென்று பிரசாரம் செய்வார்களேயானால், உண்மையிலேயே கிராம மக்கள் இவர்களுடைய பேச்சுக்கு இடம் கொடுக்கமாட்டார்கள். இது நம்முடைய காரியம். நம்முடைய பகுதிக்கு வேண்டிய ஒரு நல்ல திட்டம், பஞ்சாயத்து திட்டம், இதை நீங்கள் குறையாகச் சொல்லுகிறீர்களே இவ்வளவு நல்லது செய்யும் ஆளும் கட்சியினர் இருக்கையில் நீங்கள் எதற்கு அங்கத்தினர்களாய் அங்கு செல்வது என்று மக்களே நல்ல விளக்கமாக விடைகூறி அனுப்பிவிடுவார்கள். அந்த ஒரு பயத்தினால்தான் இதைத் தேர்தல் அறிக்கை என்றும் இம்மாதிரி குறையாகப் பேசுகிறார்கள்.

அவர்கள் நிதி நிலை அறிக்கையின் மீது கூறும் இன்னொரு குற்றச்சாட்டு என்னவென்றால், சமுதாய நல அபிவிருத்தித் திட்டத்தின்கீழ் செய்யப்படக்கூடிய பிரசாரம் அத்தனையும் அரசாங்கத்தை பொறுத்தது அல்ல. ஆளும் கட்சியின் பலத்தை அதிகப்படுத்துவதற்கு அவர்கள் காரியங்களை செய்து வருகிறார்கள் என்றெல்லாம் குறை கூறுகிறார்கள். இதைக் குறித்து நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன். அரசியல் வேறு, அரசாங்கம் வேறு என்பதை முதலில் உணர்ந்துகொள்ளவேண்டும். அரசாங்கம் செய்யும்படியான காரியங்கள் அத்தனையும் செய்வதற்கும் மக்களிடம் எடுத்துக்கூறவும்தான் சமுதாய நல அபிவிருத்தித் திட்டம் இருக்கிறபடியால், அந்தப் பகுதிகளில் மக்களுக்கு நன்மை பயக்கும் வேலைகளை மேற்கொண்டு, அங்குள்ள குறைகளைப் போக்கி நல்ல காரியங்களைச் செய்யவேண்டும். அது அரசாங்கத்தினுடைய காரியம்தான். அரசாங்கத்தினுடைய காரியங்களைச் செய்யும் பொழுது அரசாங்கம் செய்த நல்ல காரியங்களையும் எடுத்துச் சொல்லித்தான் ஆகவேண்டும். அப்படி அரசாங்கத்தின் சார்பாகச் சொல்லும்பொழுது ஆளும் கட்சி காங்கிரஸ் கட்சியாக இருப்பதால், அவர்கள் கட்சிக்காக பிரசாரம் செய்துவருகிறார்கள் என்று குற்றம்சாட்டுவது பொருத்தம் ஆகாது என்பதையும் தெளிவாக எடுத்துக்கூற விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, கல்வியைப் பொறுத்தமட்டில் 11-வது வகுப்பு வரையில் எல்லா ஏழை குழந்தைகளும் ஜாதி அடிப்படையில் இல்லாமல் வருமான அடிப்படையில் இலவசக் கல்வி அளிப்ப தாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இது மிக்க மகிழ்ச்சியுடன் வர வேற்கத்தக்கதும் பாராட்டத்தக்கதுமாகும். ஔவையார் அவர்கள் ஜாதி இரண்டு ஒழிய வேறு இல்லை என்று கூறியிருக்கிறார்கள். இன்றையதினம் ஜாதிகளையெல்லாம் ஒழித்துவிடவேண்டுமென்று சொன்னால், அவ்வளவு சுலபம் அல்ல. அது அவ்வளவு சுலபமான காரியம் அல்ல. பல்வேறு ஜாதிகளில் இருக்கும்படியான நடை, உடை, பாவனை, பழக்கவழக்கங்கள் அத்தனையும் மாற்றப்பட வேண்டும். அப்பொழுதுதான் ஜாதிகளை வேரோடு களைந்து எறிய முடியும். அதற்கு காலதாமதம் ஆகும். சுதந்திரம் அடைந்த பிறகு நாம் எல்லோரும் சோஷலிச சமுதாயம் அமைக்கவேண்டும் என்று சொன்னால், முற்பட்டவர்கள், பிற்பட்ட இனத்தைச் சேர்ந்தவர்கள், தாழ்த்தப்பட்டவர்கள் என்று 3 பிரிவாக இருக்கக்கூடாது என்ற அடிப்படையில் காரியங்களைச் செய்ய முற்படும் காலத்தில், ஹரிஜனங் களும், பிற்பட்ட இனத்தைச் சேர்ந்தவர்களும், தாழ்த்தப் பட்ட வர்களும் முற்பட்டவர்கள் இருக்கும்படியான நிலைமையை அடையவேண்டும். அப்பொழுதுதான் நாம் சோஷலிச சமு தாயத்தை அடைபவர்களாக இருக்க முடியும் என்று உண்மை யிலேயே நாம் காரியங்களைச் செய்துவருகிறோம். அந்த முறையில் பார்க்கும்பொழுது தாழ்த்தப்பட்டவர்களுக்கும், பிற்பட்டவர் களுக்கும் பல ஆண்டுகளாக சலுகைகள் வழங்கப்பட்டாலும்கூட இப்பொழுதான் அதை ஓரளவுக்கு அவர்கள் உணர்ந்து அந்தச் சலுகைகளைப் பெற முன்வருகிறார்கள். முற்பட்ட இனத்தைச் சேர்ந்தவர்கள்கூட பிற்பட்ட இனத்தவர்கள் என்று கூறி சலுகை களைப் பெறுவதற்கு முயற்சி செய்கிறார்கள் என்று அறிகிறோம். இம்மாதிரி குறைகளைப் போக்கவேண்டும். பிற்பட்ட இனத்தவர் களும், தாழ்த்தப்பட்டவர்களும் முற்பட்ட இனத்தவர்களுடன் சம அந்தஸ்து அடையவேண்டும் என்றால் மேலும் இந்த சலுகைகளை சில காலத்திற்கு நீடிக்கவேண்டும். அதேபோன்று உத்தியோகஸ் தர்கள் நியமனம் செய்வதிலும் எல்லோரும் சமம் என்ற நிலைமை ஏற்படுத்தவேண்டும். அதோடுகூட, தாழ்த்தப்பட்டவர்களுக்கு இவ்வளவு தொகை, பிற்பட்ட இனத்தவர்களுக்கு இவ்வளவு தொகை, முற்பட்ட இனத்தவர்களுக்கு இவ்வளவு தொகை என்று ஒதுக்கி வைத்து அதில் எல்லா ஏழைக் குழந்தை களுக்கும் சலுகை கொடுத்துவிட்டால் மிகச் சாலச் சிறந்ததாக இருக்கும் என்று சொல்லிக்கொண்டு என்னுடைய தொகுதி சம் பந்தப்பட்ட மட்டில் மான்யக் கோரிக்கைகள் விவாதத்தின்மீது எடுத்து உரைக்கலாம் என்று எண்ணி, இத்துடன் என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

* Sri P. JAYARAJ : மதிப்பிற்குரிய உதவி சபாநாயகர் அவர்களே, இந்த 1961-62-ம் ஆண்டு நிதி நிலை அறிக்கையை கனம் நிதி அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்ததை வரவேற்று என்னுடைய கருத்துக்களைச் சொல்ல முன்வருகிறேன். இவ்வாண்டு அறிக்கையிலே ஏழை மாணவர்கள் எல்லோருக்கும் ஜாதிப்

6th March 1961] [Sri P. Jayaraj]

பாகுபாடு இல்லாமல் 11-வது வகுப்பு வரை இலவசக் கல்வி அளித்திருக்கிற திட்டத்தை ஏழை மக்களாகிய யாரும் பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறார்கள். இவ்வாண்டு 2 கோடி 85 லட்சம் ரூபாய் துண்டு விழுந்தாலுங்கூட, எவ்விதமான வரி விதிப்பும் இல்லாமல் இந்த வரவு செலவுத் திட்டத்தைக் கொண்டுவந்திருப்பதை யாவரும் வரவேற்று பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறோம்.

அதே சமயத்தில் தஞ்சை ஜில்லாவிலே சென்ற நவம்பர் மாதத்திலே பெய்த பெருத்த மழையின் காரணமாக வெள்ளம் ஏற்பட்டு, விளைச்சல் பாதிக்கப்பட்டு இன்று விவசாயிகள் கவலைக்குள்ளாகியிருக்கிறார்கள். இந்த வெள்ளப் பெருக்கினால் ஏற்பட்ட கஷ்டத்தைத் தணிக்க சர்க்கார் உடனடியாக நடவடிக்கை எடுத்து உணவு, உடை எல்லாம் கொடுத்தார்கள். ஆனால் அவர்கள் நீண்ட காலம் வாழ்வதற்கு, அவர்களுடைய வாழ்க்கையை வளம்பெறச் செய்வதற்கு சர்க்கார் வழிவகை செய்யவேண்டும். கிழக்கு தஞ்சைப் பகுதியிலே சுமார் 40,000 ஏக்கர் பாதிக்கப்பட்டிருக்கிறது. இதன் காரணமாக சாகுபடியாளர்கள் நெல்லை அளக்க முடியாத நிலையில் இருக்கிறார்கள். இந்த வெள்ளப் பெருக்கினால் பாதிக்கப்பட்ட விவசாயிகளிடமிருந்து நெல்லை ஒரே அடியாக அளந்துவிடவேண்டுமென்று அங்கேயுள்ள மிராசுதார்கள் கேட்க முன்வரவில்லை. காரணம் என்னவென்றால், இந்த சாகுபடியாளர்கள் நெல் அளக்கவில்லை என்றால், அந்தக் காரணத்தை வைத்துக் கொண்டு ரெவென்யூ கோர்ட்டுக்குப் போய் எப்படியாவது அவர்களை நிலத்திலிருந்து அப்புறப்படுத்தி விடலாமென்று நினைக்கிறார்கள். பல்லாயிரக் கணக்கான விவசாயிகள் அறுவடை செய்ததிலே கண்டுமுதல் சரியாகக் காணவில்லை. மிராசுதார்களும் நெல்லை எடுக்கவில்லை. ஆகவே, இந்த விவசாயிகளை நிலத்தை விட்டு அப்புறப்படுத்தாமல் இருப்பதற்கு சர்க்கார் உடனடியாக ஒரு சட்டத்தையோ அல்லது ஆர்டினன்ஸையோ கொண்டு வர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கீழ்த் தஞ்சை ஜில்லாவிலே சீர்காழி, மாயவரம், நாகப்பட்டிணம், நன்னிலம், திருத்துறைப்பூண்டி போன்ற கடற்கரைப் பகுதிகளிலே உள்ள விவசாயிகள்தான் பெரிதும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். குத்தகை பாக்கியிருந்தால் அதைத் தள்ளுபடி செய்து கொடுப்பதுடன், விவசாயிகளை நிலத்திலிருந்து அப்புறப்படுத்தாமல் இருப்பதற்கு சர்க்கார் உடனடியாக உத்தரவுபோடவேண்டும். இல்லையென்றால் அங்கே இருக்கிற பல்லாயிரக் கணக்கான விவசாயிகள் நிலத்திலிருந்து அப்புறப்படுத்துவதற்கு ஏதுவாகும். அதை உடனடியாக சர்க்கார் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

விவசாயிகளுக்கு பாதுகாப்பு அளிப்பதற்கு கன்ஸிலியேஷன் கோர்ட், ரெவென்யூ கோர்ட் என்று ரெண்ட் கோர்ட்டுகள் இருக்கின்றன. 40-வாரச் சட்டத்திலே கோர்ட்டில் விவசாயிகள் ஏஜண்ட் ஆஜராகலாம், மிராசுதார்கள் ஏஜண்ட் ஆஜராகலாம் என்று இருந்தது. 60-வாரச் சட்டம் வந்த பிறகு விவசாயிகள் ஆஜராகலாம் என்பது திருத்தப்பட்டு, அவர்களுடைய வக்கீல்கள் ஆஜராகலாம் என்று போடப்பட்டது. ஏழை விவசாயிகள் பணம் செலவு செய்து வக்கீல்கள் வைத்துக்கொள்ளக்கூடிய நிலையில் இல்லை. இதனால் அவர்களுடைய வாதத்தை எடுத்துச் சொல்ல முடியாமல்

இருப்பதனுல், விவசாயிகள் அப்புறப்படுத்தப் படுகிருர்கள். விவசாயிகளுடைய ஏஜெண்டோ, மிராசுதாருடைய ஏஜெண்டோ ஆஜராகலாம் என்று இருந்தால் கோர்ட்டில் நியாயமான குறைகளை எடுத்துச் சொல்ல முடியும். ஆனுல் இப்பொழுது இருக்கிற நிலைமையில் மிராசுதார்கள் திறமையான வக்கில்களை வைத்து எந்த வகையிலாவது விவசாயிகளை அப்புறப்படுத்தி விடுவதினுல், அவர்கள் நிர்கதியாக இருக்கிருர்கள். ஆகவே 40-வாரச் சட்டத்திலிருந்தபடி ஏஜெண்டுகள் ஆஜராகலாம், வக்கில்கள் ஆஜராகக் கூடாது என்றிருந்தால் விவசாயிகள் நன்மை பெறமுடியும். இல்லையென்ருல் பணம் இல்லாத காரணத்தினுல் கோர்ட்டில் தங்கள் கோரிக்கையை எடுத்துச் சொல்வதற்கு வாய்ப்பு இல்லாமல் நிலத்தை விடவேண்டியிருக்கும்.

விவசாயப் பெருங்குடி மக்கள் சர்க்காரிலிருந்து விவசாயக் கடன், உழவு மாட்டுக்குக் கடன் என்று எல்லாம் கடன்கள் வாங்கியிருக்கிருர்கள். இந்த ஆண்டு அவர்கள் பாதிக்கப்பட்டிருக்கிற காரணத்தினுல் ஒரு ஆண்டு ஒத்தி வைத்து, அடுத்த ஆண்டு வசூல் செய்து கொள்ளலாமென்று உத்தரவு போட்டால் கடனிலிருந்து தப்பிக்க முடியும். சர்க்கார் உடனடியாக இதைக் கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

கிழக்கு தஞ்சைப் பகுதியில் எங்கேயும் நியாய விலைக்கடைகள் இல்லை. ஆகவே நியாயவிலை கடைகளை அங்கே ஸ்பெஷலாகத் திறப்பதற்கு உத்தரவு போடவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

தேவஸ்தான நிலங்களை கூட்டுறவு முறையில் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று சர்க்கார் திட்டம் இருந்தும் கூட, மொத்தக் குத்தகை என்ற பெயரால் இப்பொழுது நிலத்தை எடுத்துக் கொண்டு, கூட்டுறவு முறையில் கொடுப்பதற்கு முன்வருவதில்லை. இம்மாதிரி பல கோயில்கள், மடங்களுக்குச் சொந்தமான நிலங்களை மொத்தக் குத்தகைக்கு எடுத்துக் கொள்ளுகிருர்கள். திருவாவடுதுறை மடத்து நிலங்களை ஒரு பெரிய நிலச்சுவான்தார் எடுத்துக் கொண்டு அந்த நிலம் கூட்டுறவு முறையில் ரெஜிஸ்தர் செய்யப் பட்டும்கூட கொடுக்கப்படவில்லை. சர்க்கார் கொண்டுவந்திருக்கும் சட்டத்திலே அவர்களும் விவசாயிகள், சாகுபடியாளர்கள், ஆகவே அவர்களை அப்புறப்படுத்த முடியாது என்றிருப்பதால், கூட்டுறவு முறையில் நிலங்கள் கொடுக்கப்படுவதில்லை. கூட்டுறவு முறை இந்த நாட்டில் அதிகமாக விஸ்தரிக்கப்பட்ட வேண்டுமென்று சொல்லும் சர்க்கார் இந்த பாதுகாப்புச் சட்டத்தை திருத்தி அமைப்பார்களேயானுல் ஏழை விவசாயிகள் இதிலே பங்கு கொள்ள முடியும்.

அடுத்தபடியாக, நீர்ப்பாசனத் திட்டங்களைப் பொறுத்தவரையில் சர்க்கார் காலதாமதம் இல்லாமல் பணத்தை ஒதுக்கினுர்களேயானுல், கண்டிராக்டர்கள் அவசரம் அவசரமாக செய்யக்கூடிய நிலைமை ஏற்படாது. சமீபத்தில் நண்டலாற்றில் உடைப்பு எடுத்து 10,000 ஏக்கர்கள் பாதிக்கப்பட்டிருக்கின்றன. நண்டலார் குதிரைக் குத்தி வாய்க்காலில் உடைப்பு ஏற்பட்டது. 4,000 ஆட்களால் கூட்

6th March 1961] [Sri P. Jayaraj]

அதை அடைக்கமுடியவில்லை. அந்த கிராமத்தில் இருக்கிற விவசாயிகளுக்கு பாதுகாப்புக் கொடுப்பதுடன், அங்கே இருக்கிற நிலச்சுவான்தார்களுக்கு வரிவஜா செய்துகொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதே சமயத்தில் 6-ல் ஒரு பங்கு நிலத்திலிருந்து உற்பத்தி கிடைத்தால் வரி வஜா செய்வதற்கு சட்டமில்லை என்று சொல்லுகிறுர்கள். 6-ல் ஒரு பருதிகூட கிடைக்காத கிராமமாக இருந்தால் சர்க்கார் விதிவிலக்கு அளிப்பார்களேயானல் பாதிக்கப்பட்ட மக்களுக்கு நன்மை கிடைக்கும்.

விரசோழனிலிருந்து கோவிந்தக்கால் வாய்க்காலாகவும் வடிகாலாகவும் வருகிறது. 20,000 ஏக்கர் பாசனம் செய்வதற்கு வசதி இருக்கிறது. கும்பகோணத்திலிருந்து நண்டலார் கழிவு நீர் அந்தக் கால் மூலம் வருகிறது. காவிரி ஆற்றிலிருந்து நேரடியாக தொடர்பு பெற்ற ஆற்றிலிருந்து இது பிரியவில்லை. இந்தக் கோவிந்தக்கால் வாய்க்காலை அகலப்படுத்தினுல். 20,000 ஏக்கர் பாசனத்திற்கு வரும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்த படியாக, ஹரிஜனங்களுக்காக கிட்டத்தட்ட மூன்று கோடியே ஆறு லட்ச ரூபாய் ஒதுக்கியிருப்பதற்காகப் பாராட்டுகிறேன். இன்னும் அது பற்றவில்லையென்ருல், சர்க்கார் அதிகம் ஒதுக்குவார்கள் என்று நம்புகிறேன். அப்படி ஹரிஜனங்களுக்கு ஒதுக்குவதை மனமாற வரவேற்கிறேன். நாட்டிலே . .

• DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8–30 a.m. tomorrow.

The House then adjourned.

### IV—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

*A.—Statutory Rules and Orders.*

173. *Notification issued with G.O. No. 4524, Revenue, dated 5—11—1960 under the Madras Hindu Religious and Charitable Endowments Act, 1959.* [*Laid on the table of the House under Section 116 (3) of the Madras Hindu Religious and Chairtable Endowments Act, 1959 (Madras Act 22 of 1959).*]

174. *Amendment to the Madras Public Service Commission Regulations issued in G.O. Ms. No. 2011, Public (Services-A), dated 22—12—1960.* [*Laid on the table of the House under Article 320 (5) of the Constitution of India.*]

*B.—Reports, Notifications and other Papers.*

84. *Madras Government's Review on the working of the Fertilizers and Chemicals, Travancore Limited, Alwaye, Kerala State, for the year ended 31st December 1959.*